# சொல்வயல்

திங்கள் மின்னிதழ்

சொல்வளமே மொழிவளம் நெல்வளமே நாட்டின்வளம்

" சொற்குவை தேரும் பாவலர் மேவத் தொகுப்பீடம்"
(திருவிளையாடற்புராணம்–
தருமிக்குப் பொற்கிழியளித்த படலம்)

ஐ.எஸ்.பி.என் (ISBN ): 978-81-958032-0-0

செந்தமிழ்ச் சொற்பிறப்பியல் அகரமுதலித் திட்ட இயக்ககத்தின் வெளியீடு

வயல் : 4 விளைச்சல் : 33 திருவள்ளுவர் ஆண்டு 2054 பிப்பிரவரி –2023


## உள்ளே...



- ஆங்கில மருத்துவமும் இனி அருந்தமிழில்!
- மொழிஞாயிறு தேவநேயப் பாவாணரின் உட்கரணம்!
- பண்பாடு, எதிர்ப்பண்பாடு, பண்பாட்டுப் பன்மை!
- சொல்லாக்க வழிமுறை!
- ஊர்ச்சொற்கள்!
- இயக்ககச் செயற்பாடுகள்!
- பன்னாட்டுக் கலைச்சொல்லாக்கப் பயிலரங்கம்!











# காவல் துறைக் கலைச்சொற்கள்

| | | |
|---|---|---|
| Air gun | – | காற்றழுத்தத் துமுக்கி |
| Back sight | – | துமுக்கி பின் குறி நோக்கி |
| Discharge lamp | – | மின்னிறக்க விளக்கு |
| Inspection lamp | – | ஆய்வு விளக்கு |
| Firing pin mark | – | சுடும் ஊசிக் குறி |
| Indicator | – | அறிகுறி விளக்கு |
| Hand grenade | – | கையெறி குண்டு |
| Investigation | – | புலன் உசாவல் (விசாரணை) |
| Light vehicle | – | இலகு ஊர்தி |
| Machine gun | – | இயந்திரத் துமுக்கி |
| Moving beats | – | நகரும்முறைக் காவல் |
| Night round | – | இரவுச் சுற்றுக் காவல் |
| Pedestrian crossing | – | குறுக்கு நடைபாதை |
| Photo micrograph | – | நுண் பெருக்க ஒளிப்படம் |
| Physical evidence | – | தடயப்பொருள் |
| Pick up van | – | சிறு மூடுந்து |
| Pistol | – | கைத் துமுக்கி |
| Punctuation marks | – | நிறுத்தக் குறியீடுகள் |
| Sign board | – | வழிகாட்டிப் பலகை |
| Signal lamp | – | சைகை விளக்கு |
| Sound horn | – | ஒலி எழுப்புக |
| Striking velocity | – | தாக்கத் திசைவேகம் |
| Traffic chart | – | போக்குவரத்து விளக்கப்படம் |
| Traffic congestion | – | போக்குவரத்து நெரிசல் |
| Traffic signal | – | போக்குவரத்துச் சைகை |

சொற்குவை (sorkuvai.com) வலைத்தளத்தில் தமிழுக்கு நிகரான ஆங்கிலச் சொற்களையும், ஆங்கிலத்திற்கு நிகரான தமிழ்ச்சொற்களையும் பார்த்துப் பயன்கொள்ளலாம்.


# சொல்வயல்

செந்தமிழ்ச் சொற்பிறப்பியல் அகரமுதலித் திட்ட இயக்ககத்தின் வெளியீடு

திருவள்ளுவர் ஆண்டு 2054 சுறவம் (தை)

பிப்பிரவரி – 2023

ஆசிரியர் : முனைவர் கோ.விசயராகவன்
இயக்குநர்

பொறுப்பாசிரியர் : முனைவர் வே. கார்த்திக்

இதழ்க்குழு : திரு. கி. இராமர்
திரு. ஏ. காந்தி
திருமதி. க. கஸ்தூரி



செந்தமிழ்ச் சொற்பிறப்பியல் அகரமுதலித் திட்ட இயக்ககம்
முதல் தளம், நகராட்சி நிருவாக அலுவலகக் கட்டடம்,
எண்.75, சாந்தோம் நெடுஞ்சாலை, எம்.ஆர்.சி. நகர்,
சென்னை – 600 028.
கட்டணமில்லா அலைபேசி : 14469
மின்னஞ்சல் : solvayal@gmail.com
வலைத்தளம் : www.sorkuvai.com

Directorate of Tamil Etymological Dictionary Project,
First floor, Urban Administrative office Campus,
No:75,Santhome high Road,
MRC Nagar, Chennai–28
Toll free : 14469
Mail id : solvayal@gmail.com
Website : www.sorkuvai.com



ஐ.எஸ்.பி.என் (ISBN ): 978-81-958032-0-0

# ஆங்கில மருத்துவமும் இனி அருந்தமிழில்




மனிதனின் அச்ச உணர்வின் காரணமாகத் தோன்றியவை மதமும், மருத்துவமும் ஆகும். அறிவியல் வளர வளர இவைகளுக்கு இடைப்பட்ட தொடர்பும் அற்றுப்போனது. மருத்துவம் என்ற சொல் இலத்தீன் மொழியிலுள்ள ஆர்ஸ் மெடிசினா (Ars Medicina) என்ற சொல்லிலிருந்து பெறப்பட்டதாகும். இதன் பொருள் குணப்படுத்தும் கலை என்பதாகும். மருத்துவம் என்றாலே அனைவருக்கும் உடனே நினைவுக்கு வருவது ஆங்கில மருத்துவம்தான். ஹிப்போகிரேட்டீஸ் ஆங்கில (அலோபதி) மருத்துவத்தின் தந்தை ஆவார். இயற்கை வழிமுறைகளாலும் வாழ்க்கை முறையின் சிறு மாற்றங்களாலும் நோய்களைக் குணமாக்க முடியும் என்று சொல்லி ஆங்கில மருத்துவத்துக்கு அடித்தளம் அமைத்தவர். எந்த நோயாக இருந்தாலும் நோயாளியை நேரடியாகப் பார்த்து ஆய்வுசெய்து நோயின் அறிகுறிகளைக் கவனித்து நோயைக் கணித்து மருத்துவம் செய்ய வேண்டும் என்று மருத்துவர்களுக்கு வழிகாட்டியவர். இதனைத்தான் நம் வான்புகழ் திருவள்ளுவரும்,

"நோய்நாடி நோய்முதல் நாடி அதுதணிக்கும்
வாய்நாடி வாய்ப்பச் செயல்" (குறள். 948)

என்று அறிவுறுத்தினார் போலும்.

உடல்நலம், நோய் இவை நாணயத்தின் இரு பக்கங்கள் போல் என்றே கூறலாம். தவமுனிவர்களும் சித்தர்களும் நோயைப் பற்றி அதிகம் சிந்தித்து, நோயற்ற வாழ்வே குறைவற்ற செல்வம் என்றனர்.

"உடம்பை முன்னம் இழுக்கென் றிருந்தேன்
உடம்பினுக் குள்ளே உறுபொருள் கண்டேன்
உடம்பினுள்ளே உத்தமன் கோயில் கொண்டானென்று
உடம்பினை யானிருந்து ஓம்புகின்றேனே"

என்றார் திருமூலர்.

"மருந்தென வேண்டாவாம் யாக்கைக்கு அருந்தியது
அற்றது போற்றி உணின்" (குறள் 942)

என்கிறார் வள்ளுவப் பெருந்தகை. தமிழ்நாட்டில் சித்த மருத்துவம் புகழ்பெற்ற மருத்துவமுறை. சீனாவில் தொடுவூசி மருத்துவம் (அக்குபஞ்சர் வைத்தியம்), அரபு நாடுகளில் சேணிய மருத்துவம் (யுனானி மருத்துவ), செருமனியின் ஒல்லியல் மருத்துவம் (ஹோமியோபதி மருத்துவ), கேரளாவின் ஆயுள்நல மருத்துவம் (ஆயுர்வேத மருத்துவ) என அந்தந்தப் பகுதிகளில் அதற்கான மருத்துவ முறைகள் தோன்றி வளர்ந்தன.

இவை எல்லாமே மருந்து, மாத்திரை, குளிகை, சாறு, கருக்கு (கஷாயம்), இளகியம் (லேகியம்) என்பனவாக உள்ளன. ஆனால், கையோ காலோ முறிந்துவிட்டால் பாதிக்கப்பட்டவரின் எலும்பு முறிவைச் சரி செய்ய அறுவை மருத்துவம் கட்டாயத் தேவையானது. ஆங்கில மருத்துவத்தில் முகாமையான பங்கு என்பது அறுவை மருத்துவ முறையும்தான். இந்த அறுவை

மருத்துவத்தின் தாய்நாடு இந்தியாதான். சுஸ்ருதர் என்ற இந்திய மருத்துவர்தான் அறுவை மருத்துவத்தின் ஆதித் தந்தை. இவர் எட்டுவிதமான அறுவை முறைகளைப் பண்டைய காலத்தில் கையாண்டுள்ளார். நோய் எதிர்ப்பு ஆற்றலுக்கான நாட்டு மருந்துகளான நிலவேம்பு, கபசுரக்குடிநீர் ஆகியவை உயிர்ப் பாதுகாப்பினை நல்கியதால், மகுடைத் தீநுண்மி (கொரோனா வைரஸ்) காலத்தில் அவற்றை அருந்தினோம். ஆனாலும், மக்களிடையே மருத்துவம் எனும் போதே ஆங்கில மருத்துவம்தான் நினைவுக்கு வருகிறது. நம்முடைய ஆதி மருத்துவ முறையான சித்த மருத்துவம் என்றும் பயனுறு மருத்துவம் என்பதை உணர்ந்து பயனாற்ற வேண்டும். ஒரு பக்கம் நம் தாய்மொழியான தமிழ் மொழியை வாசிக்கவும், எழுதவும் தெரியாமல் நம் தலைமுறைகள் வளர்ந்து கொண்டிருப்பதோடு, என்ன நோய் என்றாலும் உடனே மருத்துவமனை என்ற நோக்கில் வாழ்கிறோம். அதிலும், குழந்தைகளுக்கு என்றால் சொல்லவே வேண்டாம். மருத்துவமனை நோக்கி வெகுவிரைவுப் பயணம். மருத்துவரும் எல்லா ஆய்வுகளையும் செய்துவிட்டு ஒரு முடிவுக்கு வந்து மருந்துகளைக் கொடுப்பார். இந்த மருந்துகளைத் தொடர்க, பிள்ளைக்கு Primary Complex கவனமாக இருக்க வேண்டும் என்பார். இதனைத் தமிழில் குழந்தைப் பருவக் காசநோய், அதாவது குழந்தைகளுக்கான தொடக்கநிலை சளிக்காய்ச்சல் என்றால் அச்சம் தவிர்க்கப்படும். இது சாதாரண சளித் தொந்தரவுதான். ஆனால், Primary Complex என்ற இந்த ஆங்கிலச் சொல்தான் புரியாமலே நம்மை அச்சுறுத்துகிறது.

நம் அன்னைத் தமிழாம் அருந்தமிழில் இச்சொல்லைக் கூறினால் நமக்கு இத்தனை அச்சமிருக்காது. நோய்களிலிருந்து விடுபடவும், நோய்களைத் தடுக்கவுமான பயணத்தை மனித குலம் தொடங்கியபோதே உருவானது இது. பச்சிலைகளைப் பறித்து உண்பது ஒரு வழி. எதுவுமே உண்ணாமல் இருப்பது ஒருவழி என்று மரபார்ந்த மருத்துவமுறைகள் நிலை பெற்றுள்ளன என்றால் அதற்குக் காரணம் நம் தாய்மொழி. மருத்துவத்துறை ஆக்கங்கள் நெடுங்காலமாகத் தமிழில் உண்டு. குறிப்பாகச் சித்த மருத்துவக் குறிப்புகள் தமிழிலேயே முதன்மையாக இருக்கின்றன. புத்தியல்கால மருத்துவம் தொடர்பான ஆக்கங்களும் ஓரளவு தமிழில் வெளிவரத் தொடங்கியுள்ளன.

மருத்துவத் தமிழ் ஏன் இன்றியமையாததாகிறது?

நோய்களைப் பற்றிய அடிப்படைத் தகவல்களை மக்கள் அவரவர் மொழியில் புரிந்துகொள்வது இன்றியமையாதது ஆகும். மருத்துவத்துறை சார்ந்தவர்கள் மருத்துவம் பற்றிய தகவல்களைத் தமிழ்மொழியில் ஆவணங்களாகப் பதிவு செய்ய முனைய வேண்டும். எழுத்தாளர் ஜெயமோகன் அவர்கள் கூறும் விவரம் இது: மருத்துவத்தை ஆங்கிலத்திலேயே கற்பதனால் அவர்களுக்குத் தமிழில் மருத்துவத் தகவல்களைச் சொல்லும் பழக்கம் இல்லை. தொலைக்காட்சிப் பேட்டியில் மருத்துவர் சிலர் பேசுவதைக் கேட்டால் இதை உணரலாம். "ஆக்சுவலி இந்த நெர்வ் நம்ம ஸ்பைனல் கார்டுக்குள்ளே இருந்து ஸ்கல்லுக்குள்ள எண்டர் பண்றப்ப இட் ஹேஸ் எ ஸ்மால் ஸ்டிரிணன் ஆன் தட் பிளேஸ்.........". உண்மையில் இவர்கள் நோயாளிக்கு எதைப் புரிய வைக்க முயற்சி செய்கிறார்கள்?

தொண்டு செய்வாய்! தமிழுக்குத்

துறைதோறும் துறைதோறும்

துடி தெழுந்தே!

என்ற பாவேந்தர் பாரதிதாசன் அடிகளுக்கு ஏற்ப மொழியின் ஆக்கமும் ஊக்கமும் அதன் சொல்வளத்தைச் சார்ந்தே அமைகிறது. எனவே, தமிழ்மொழியின் காக்கவும் பெருக்கவும் தமிழ்நாடு அரசின் செந்தமிழ்ச் சொற்பிறப்பியல் அகரமுதலித் திட்ட இயக்ககம் மொழி ஆக்கத்திற்கான பல்வேறு பணிகளை முனைப்புடன் செய்து வருகிறது. பல்வேறு

ஆய்வரங்கம், கருத்தரங்கம், பயிலரங்கம், வல்லுநர் குழுக் கூட்டங்கள், துறைதோறும் கலைச்சொற்கள் பெறுதல், கள ஆய்வில் நேரடியாக மக்களிடம் வழக்காற்றுச் சொற்களைப் பெறுதல் எனத் தொடரும் செயல்பாடுகளுடன் தமிழ்நாடு அரசு செந்தமிழ்ச் சொற்பிறப்பியல் அகரமுதலித் திட்ட இயக்ககத்தின் வழியாக மருத்துவத் துறையில் ஆங்கிலச் சொற்களுக்கு இணையான தமிழ்க் கலைச்சொல் அகராதி உருவாக்கப் பணியும் தொடங்கப்பட்டுள்ளது. இப்பணி மிகப் பெரிய அளவில் முறையாகச் செயற்படுத்தப்பட்டுக் கலைச்சொற்கள் சீராய்வு செய்து பெறப்பட்டுள்ளன. இனி வரும் காலங்களில் ஆங்கில மருத்துவமும் (அலோபதியும்) அருந்தமிழில் அறியும் நிலை உருவாகும். பிணி பற்றிய விளக்கத்தையும் அன்னைத் தமிழில் கேட்கும்போது வலியும் வருத்தமும் குறைந்தே தெரியும். நிற்க.,

மொழிக்காப்பு ஆவணங்களான அகராதிகளைக் காலத்திற்கேற்ற பொருண்மைகளில் உருவாக்கி வெளியிட்டுவரும் அகரமுதலி இயக்ககம் செயற்படுத்திவருகிற கலைச்சொல்லாக்கம் உள்ளிட்ட மொழிக்காப்புப் பணிகளுக்குத் துணைநிற்கும் அகராதியியலாளர்கள், சொல்லாக்க வல்லுநர்கள், மொழியியலாளர்கள், தமிழறிஞர்கள், தமிழார்வலர்கள், ஆய்வாளர்கள், மாணவர்கள் உள்ளிட்ட அனைவருக்கும் இவ்வியக்ககத்தின் சார்பில் நன்ற நவில்கிறேன். அகரமுதலி இயக்ககத்தின் மேனாள் பதிப்பாசிரியர் முனைவர் மா. பூங்குன்றன் அவர்களின், "மொழிஞாயிறு தேவநேயப் பாவாணரின் உட்கரணம்" என்ற தலைப்பிலான கட்டுரையும், ஞாலமறிந்த அகராதியியல் அறிஞர் முனைவர் பேராசிரியர் ச.சச்சிதானந்தம் அவர்களின், "பண்பாடு, எதிர்ப்பண்பாடு, பண்பாட்டுப் பன்மை" என்னும் பொருண்மையிலான கட்டுரையும், தமிழாய்ந்த மருத்துவர்களான மரு. சுப. திருப்பதி, மரு. சு. கார்த்தி ஆகியோர் இணைந்து ஆக்கியளித்த "சொல்லாக்க வழிமுறை" என்னும் கட்டுரையும், காட்டுநாவல் ஊராட்சி ஒன்றிய பட்டதாரி ஆசிரியர் திரு. அண்டனூர் சுரா அவர்களின், "ஊர்ச்சொற்கள்" என்னும் கட்டுரையும் இம்மாதச் "சொல்வயல்" மின்னிதழுக்கு அணிசேர்க்கின்றன. அப்பெருந்தகைகளுக்கு மனமார்ந்த நன்றியை உரித்தாக்குவதில் மகிழ்ச்சிகொள்கிறேன். இவ்வியக்ககம் நெறிப்படுத்தும் இணையவழிப் பன்னாட்டுக் கலைச்சொல்லாக்கப் பயிலரங்குகளில் பங்கேற்றுத் தமிழ்க் கலைச்சொற்களை அறிமுகம் செய்து உரையாற்றிய பலதுறை சார்ந்த அனைத்துத் தமிழுள்ளங்களுக்கும், 70ஆவது அமர்வில் பங்கேற்று வாழ்த்துரை வழங்கிச் சிறப்பித்த சவுதி அரேபியா, மெய்நிகர் அறிவியல் தமிழிருக்கையின் முதன்மை அறிவியல் மதியுரைஞர் மரு. மு. செம்மல் ஐயா அவர்களுக்கும் என் உள்ளார்ந்த நன்றியை உரித்தாக்குகிறேன்.பயிலரங்கங்களுக்கான தொழில்நுட்ப ஒருங்கிணைப்பை இடையறாது செய்துவரும் சென்னை வேல்ஸ் அறிவியல் (ம) தொழில்நுட்ப உயர் ஆராய்ச்சி நிறுவனத்தின் தமிழ்த்துறை இணைப் பேராசிரியர் முனைவர் இரா. பன்னிருகைவடிவேலன் அவர்களுக்கும் அகம்நிறை அன்பு நன்றியை உரித்தாக்குகிறேன். தமிழ் என்னும் ஒற்றைப்புள்ளியில் ஒருங்கிணைந்த உள்ளத்தினராய் என்றென்றும் ஒருங்கிணைந்து செயலாற்றுவோம்...

செயலால் பேசுவோம்...

> பகுத்தறிவே மானமுடன் படைத்தவனும் தமிழனே!
> பகுத்தறிவால் திணைவகுத்த பண்புடையான் தமிழனே!
>
> —மொழி ஞாயிறு தேவநேயப் பாவாணர்

# மொழிஞாயிறு தேவநேயப்பாவாணரின் உட்கரணம்


முனைவர் மா. பூங்குன்றன்

சிறப்புநிலைப் பதிப்பாசிரியர்
தமிழ் இந்தோ – ஐரோப்பிய வேர்ச்சொல்
ஒப்பீட்டு அகராதி,
சென்னை




இந்திய மொழிகளில் தமிழ்மொழியில்தான் முதன்முதலில் பேரகராதி வெளிவந்தது. சென்னைப் பல்கலைக் கழகந்தான் அதை வெளியிட்டது. பேராசிரியர் வையாபுரியார் அவர்களை முதன்மைப் பதிப்பாசிரியராக் கொண்டு அது வெளிவந்தது. அது வெளிவந்தது ஒரு பெருமைக்குரிய செய்தியாயினும் அதன் தலைப்புச் சொற்கள் பலவற்றிற்கு மூலச்சொற்கள் சமற்கிருதமாகவே காட்டப்பட்டிருந்தன.

அந் நாளிலேயே தேவநேயப்பாவாணர் அவர்கள் அவற்றைக் கண்டு மிகவும் கொதித்து வருந்தலுற்றார். "சென்னைப் பல்கலைக் கழகத் தமிழ்பேரகராதியின் சீர்கேடுகள்" என்ற நூல் ஒன்றில் கடுமையாக அவற்றிற்கு மறுப்பு எழுதினார். அதன் நிறை குறைகளைச் சுட்டிக் காட்டியிருந்தார்.

அவர்கள் சமற்கிருத மூலம் என இட்டுக்காட்டியிருந்த சொற்கள் அனைத்தையும் தொகுத்து, அவற்றிற்கு உண்மையான வேர்மூலம் தமிழே என்று தன் வடமொழி வரலாறு என்ற நூலில் நிறுவிக்காட்டினார்.

சமற்கிருத அகராதிகளில் எடுத்துக்காட்டியுள்ள பல சொற்கள் வேதங்களிலும், மகாபாரதத்திலும் பயன்படுத்தப்பட்டிருப்பதாகக் கூறியுள்ளனர். சமற்கிருத நூல்களில் பயன்பாட்டில் இருப்பதால் மட்டுமே அவை சமற்கிருதச் சொற்கள் ஆகிவிடமுடியா. அவற்றில் பலவற்றிற்குத் தமிழ் வேர்மூலமாக இருப்பதையும் அவை சமற்கிருதம் போல் திரித்துக் கொண்டமையையும் பாவாணர் தம் நூல்களில் சுட்டிக்காட்டினார்.

அப்போதுதான் அவர் தமிழ்மொழிச் சொற்களின் வேர்மூல ஆய்வு தேவை என்பதை உணர்ந்தார். ஒரு சொல் பயன்பாட்டு அடிப்படையில் சமற்கிருத நூல்களில் அதிகமாகக்கூடப் பெற்றிருக்கலாம். ஆனால் அவற்றை வைத்து அச்சொல் சமற்கிருதம் என்று முடிவுக்கு வந்துவிடக்கூடாது.

அவற்றின் வேர்மூலத்தை ஆராயவேண்டும் என்று வலியுறுத்தினார்.

தமிழ்மொழிக்கு முதன்முதலாகப் பேரகராதி வந்திருந்தாலும் அது பெருமைக் குறைவாகவே அதன் செயற்பாடுகள் அமைந்துவிட்டன எனக்கருதிய பாவாணர், அவற்றைச் சீர்செய்யத் தமிழ்மொழிச் சொற்களுக்கு வேர்மூலங் காணக்கூடிய சொற்பிறப்பியல் அகரமுதலி யொன்று தொகுக்க வேண்டும் என்று அந்தக்காலத்திலேயே முடிவெடுத்தார்.

அதன் விளைவாலேயே அவர் காலத்திலேயே செந்தமிழ்ச் சொற்பிறப்பியல் பேரகரமுதலி உருவாக்கப்பணி தொடங்கப் பெற்றது. அவர் காலத்திற்குப் பின் அப்பணி நிறைவெய்தியது.

தமிழ்மொழிச் சொற்களுக்கு வேர்மூலங்காணும் பணியில் ஈடுபட்டபோதே தமிழ்மொழியில் உள்ள மூலவேர்ச்சொற்களைத் தொகுத்துப் பட்டியலிட்டுக்காட்டினார். அவற்றினின்று பல்துறைகளுக்கும் எளிமையான வகையில் புதுப்புதுக் கலைச்சொற்களையும் படைத்துக்கொள்ளலாம் என்று ஏராளமான கலைச்சொற்களை உருவாக்கிக் காட்டினார்.

இப்போது அண்ணாபல்கலைக்கழகமாக விளங்கின்ற அன்றைய கிண்டிப் பொறியியல் கல்லூரியில் உருவாகியிருந்த 'அறிவியல் தமிழ் மன்றம்' தேவநேயப்பாவாணரைப் பயன்கொண்டு கலைச்சொல்லாக்கப் பயிலரங்குகள் பலவற்றை நடத்தியது.

அதேபோல் காரைக்குடி அழகப்பா பொறியியல் கல்லூரி, கோவை பூ.சா.கோ (PSG) பொறியியல் மற்றும் கலை அறிவியல் கல்லூரி இரண்டும் பாவாணர், பெருஞ்சித்திரனார் ஆகியோரை அழைத்து அவர்களின் தலைமையில் பயிலரங்குகளை நடத்தின. ஒவ்வொன்றும் கலைச்சொற்பட்டியலைப் பருத்த நூல்களாக வெளியிட்டன.

கிண்டிப் பொறியியல் கல்லூரியில் பேராசிரியராக இருந்து, பிற்காலத்தில் அண்ணா பல்கலைக்கழகத் துணைவேந்தரான வா. செ. குழந்தைசாமி அவர்கள் தேவநேயப்பாவாணரின் மாணவர் என்பதும் குறிப்பிடத்தக்கது.

கிண்டிப் பொறியியல் கல்லூரியில் பயின்று அறிவியல் தமிழ்க்கழகத்தை நடத்திய அந்நாள் மாணவர் பின்னாள் பாரதிதாசன் பல்கலைக்கழகத் துணைவேந்தர் பேரா. பொன்னவைக்கோ, தமிழ் இணையக் கல்விக்கழக இயக்குநர்

பேரா. அர. நக்கீரன், முனைவர் செந்தமிழ்க்கோதை ஆகியோர் பாவாணரை அழைத்து பயிலரங்கு நடத்தி ஏராளமான கலைச்சொற்களை உருவாக்கித் தந்தனர். அவையனைத்தையும் ஒன்று திரட்டித்தான் தமிழ் இணையக் கல்விக்கழகம் சில ஆண்டுகளுக்கு முன்பு கலைச்சொற்களஞ்சியத்தை 14 தொகுதிகளாக வெளியிட்டுள்ளது.

தேவநேயப்பாவாணர் அவர்களின் நூல்களிலும் கட்டுரைகளிலும் பிறமொழிச் சற்றும் கலவாததோடு, புதிய கலைச் சொல்லாக்கங்கள் பலவும் விரவிக் காணப்படும். அதைப்போலவே அவரின் பேச்சு நடையிலும் பிறமொழிச் சொற்களுக்கேற்ற புதிய மொழியாக்கத் தமிழ்ச்சொற்கள் மழைபோல் கொட்டும். யாரிடம் பேசினாலும் அவர்களுக்கு எளிமையாகப் புரியுமாறு அவர்தம்

உரையாடலைத் தனித்தமிழிலேயே அமைத்துக் கொள்வார். பிறமொழிக் கலப்பைக் காணப் பொறார்.

தனித்தமிழ் இயக்கம் மறைமலையடிகள் தொடங்கியிருந்தாலும், தமிழுக்கு ஆக்கமான செயற்பாடுகள் பலவும் அவருக்குப் பின்தோன்றிய அக்கொள்கையைப் பின்பற்றியவர்கள் பலராலுமே நடைமுறைப்படுத்தப்பட்டன. மறைமலையடிகள் நூல்களை வெளியிடுவதற்காகவே சைவசித்தாந்த நூற்பதிப்புக்கழகம் தொடங்கப் பெற்றது. மறைமலையடிகளாரின் மருகரின் இளவலான வ. சுப்பையா அவர்களே அந்நூற் பதிப்புக்கழகத்தை நடத்திவந்தார்.

பழந்தமிழ் இலக்கியங்கள் பலவற்றையும் அச்சு வடிவில் கொண்டுவரும் பெரும்பணியை அது செய்தது. தமிழறிஞர்கள் பலரின் அரிய நூல்களை வெளியிட்டு தமிழுலகிற்குப் பெருமை சேர்த்தது. தேவநேயப்பாவாணரின் தொடக்கக் கால நூல்கள் பலவற்றையும் முதலில் பதிப்பித்தது அக்கழகமே.

பிற்காலத்தில் அப்பதிப்புக்கழகம் விரிவுபடுத்தப்பட்டபோது, குழுமச் சட்டமுறைப் படி (Company Act) 'Private Limited' என்று மாற்றப்பட்டது. அதை ஒவ்வொரு நூலிலும் "சைவ சித்தாந்த நூற்பதிப்புக்கழகம் பிரைவேட் லிட்." என்று பதித்து வெளியிட்டது.

தேவநேயப்பாவாணர் அவர்கள் அப்பதிப்பகத்தில் மிகவும் உறவுள்ளவராக இருந்ததால், அதன் ஆட்சியர் வ. சுப்பையா அவர்களிடம் கடுமையாக மறைமலையடிகள் வழிவந்த இந்த நூற்பதிப்புக் கழகம் அவ்வாறு ஆங்கிலச் சொற்களைத் தமிழ் எழுத்தில் எழுதலாகாது. "பிரைவேட் லிட்" என்றிருப்பதைத் தமிழில் மொழிபெயர்த்து எழுதி, அவற்றிற்குரிய ஆங்கிலத்தை வேண்டுமானால் அடைப்பில் போடலாம் என்று தம் கருத்தைத் தெரிவித்தார்.

ஆனால் திரு. வ. சுப்பையா அவர்கள் தொடர்ந்து வந்த நூல்களிலும் அவ்வாறே பதிப்பித்து வந்தார். இந்நிலையில், தேவநேயப்பாவாணர் அவரை நேரடியாகவே கண்டித்து ஒரு கட்டுரையில் 'வ. சுப்பையாவிற்கு உட்கரணம் கெட்டுவிட்டதா?' என்ற தலைப்பில் எழுதிவிட்டார்.

'உட்கரணம்' என்பது அகக்கருவி அதாவது அறிவுக்கருவி என்ற பொருளில் மூளையைக் குறிப்பதாகும். "உமக்கு மூளை கெட்டுவிட்டதா?" என்று கூறும் பொருளில்தான் பாவாணர் கடிந்து 'உட்கரணம்' என்று குறிப்பிட்டார்.

தமிழ்ப்பேரகராதியில் தமிழ்ச்சொற்களைச் சமற்கிருதம் என்று காட்டியபோதும், தனித்தமிழுக்குப் பொறுப்பான பதிப்பகம் ஆங்கிலச் சொல்லைக் கலந்து பயன்படுத்தியபோதும் ஒரே வகையில் சீற்றத்திலேயே பொங்கி எழுந்தார் பாவாணர். அவரின் 'உட்கரணம்' அங்ஙனமே செயற்பட்டது.

> தமிழுயரத் தாழ்ந்தான் தமிழன்! – அவனே
> தமிழுயரத் தானுயர்வான் தான்!
> – மொழிஞாயிறு தேவநேயப் பாவாணர்

# பண்பாடு, எதிர்ப்பண்பாடு, பண்பாட்டுப்பன்மை

முனைவர், பேராசிரியர் **ச.சச்சிதானந்தம்**
இயக்குநர் : பன்னாட்டு உயர்கல்வி
தமிழாய்வு நிறுவனம், பாரிசு



மனிதன் ஒரு சமூக விலங்கு. அவன் தனியாக வாழ்ந்தாலும் சரி, சமூகமாக வாழ்ந்தாலும் சரி, ஒரு வரையறுக்கப்பட்ட சமூகப் பண்பாட்டுச் சூழலிலேயே வாழ்கிறான். ஒரு தனிநபர் எந்த சமூகத்தை – சமூதாயத்தைச் சேர்ந்தவர் என்பதைப் பண்பாடு அடையாளம் காட்டுகிறது.

"நாங்கள்தான் உலகிலேயே நாகரிகமானவர்கள். மற்றவர்கள் எல்லாம் காட்டு மிராண்டிகள்" என்று கர்வப்பட்டனர் பண்டைய கிரேக்கர்கள். இவ்வகையான கொள்கைகள், நம்பிக்கைகள் 'தனக்குக் கீழ்தான் மற்றவர்கள்' என நினைக்கும் எண்ணத்தின் பிரதிபலிப்புகளே.

இவ்வாறாக நினைத்து, நடந்து கொள்ளும் முறைகள் ஒருவர் இன்னொருவரிலும் பார்க்க வித்தியாசமானவராக வாழச் செய்துவிட்டன. இந்த வித்தியாசமான வாழ்க்கை முறைகள், பண்பாட்டியல் வேறுபாடுகள் வேர்விட வழிகோலின.

கருவிகள், வீடுகள், தெருக்கள், இயந்திரங்கள், நூல்கள் போன்றனவும், சட்டங்கள், அரசாங்க அமைப்பு, ஆலயங்கள் என்பனவும், ஜனநாயகம், உண்மை, அழிவின்மை முதலானவையும் கொண்டு ஒரு மக்களின் பண்பாடு நிறுவப்படுகிறது.

ஒரு மக்களின் பண்பாடு பாரம்பரிய கலாசாரம், கலாசாரப் பரிமாற்றங்கள், கண்டு பிடிப்புகள் ஆகியவற்றிலிருந்து ஒரு மக்களின் பண்பாடு உருவாகி வளர்கிறது. உண்ணும் உணவிலும், உடுக்கும் உடையிலும், அமைக்கும் வீட்டிலும், குடும்ப உறவுகளிலும், சமுதாயத் தோழமைகளிலும், போற்றும் நெறிகளிலும் பண்பாடு வெளிப்படுகிறது. பண்பாட்டின் வெளிப்பாடுகளில் மொழியும் முதன்மையானது. மக்கள் சமூகங்கள் பல சேர்ந்து ஒரு சமுதாயமாகப் பின்னிப் பிணைந்து இயங்கும் பொழுது, உருவாகும் வாழ்க்கை முறைகள், பழக்க வழக்கங்கள், கலை உணர்வு, ஆட்சி அமைப்பு, சிந்தனை முதிர்ச்சி போன்ற அனைத்தும் இணைந்து சமுதாயச் சிந்தனையாக வெளிப்படுவதே பண்பாடு.

ஒரு பண்பாட்டை பராமரித்துக் காப்பதிலும், ஒதுக்குவதிலும் பெண்களின்



பங்கு மகத்தானது. அடுத்த சந்ததியினருக்குப் பண்பாட்டைப் புகட்டுவதிலும் கலை, மொழி, கைவேலை, நடனம், இசை, பாட்டு போன்றவற்றைக் கற்பித்து பாரம்பரியத்தைப் பேணுவதிலும் பெண்கள் மிக அடிப்படையானவர்கள்.

வேட்டியைக் கட்டியவர்கள், "நாஷனலை"ப் போட்டவர்கள் "கோட் சூட்டுக்கு"ப் போய் விட்டார்கள். ஆனால் சேலை கட்டியவர்கள் சேலையைக் கட்டிப் பண்பாட்டைக் காவுகிறார்கள். தலையில் பண்பாட்டு அடையாளத் துணித் துண்டைக் கட்டி, தம் சமூகப் பண்பாட்டைக் காட்டுகின்றனர் பெண்கள். குறிப்பாக ஆப்பிரிக்க அராபியப் பெண்கள்.

பொதுவாக ஒரு சமூகத்தின் பண்பாட்டுப் பாரம்பரியங்களைப் பெண்களே பலவழிகளில் – குறிப்பாக ஆடை அணிவதின் மூலம் – காவுகின்றனர். ஒவ்வொரு பண்பாடும் அந்தந்த சமூகத்துக்கு உரியவர்களின் சூழலுக்கும் வாழ்க்கைக்கும் பொருத்தமானது. அவரவர் பண்பாடு அவரவருக்கு உயர்ந்தது.

மனித சமுதாயங்களும் சரி, அவற்றின் பண்பாடுகளும் சரி, என்றென்றும் மாறாமல் அப்படியே நீடித்து நிலைத்து வந்தமை கிடையாது. இயற்கை அழிவுகள், இடப்பெயர்ச்சி, அறிவு, அரசியல் நிகழ்வுகள், பொருளாதார அம்சங்கள் முதலானவற்றால் பண்பாட்டு முறைகளில் மாற்றங்கள் ஏற்படுகின்றன.

இது தொடர்ந்து மாற்றத்துக்கு உள்ளாகி வருவது என்பதால், புதிய ஓட்டத்தில் பண்பாடு தொடர்ந்து உருப்பெற்று வருவதன் காரணமாக எந்த ஒரு சமூக, இன, நிற அல்லது தேசியக் குழுவும் ஒரே சீரான தன்மை கொண்டதாக இருக்க முடியாது.

சங்ககாலத்துத் தமிழ் பண்பாடும், இக்காலத்து தமிழ் பண்பாடும் ஒன்றல்ல. தமிழ்த் திருமணத்துக்கு அடையாளமாக தாலி கட்டுவது தமிழர் பண்பாடு. ஆனால் தாலிகட்டும் முறை பழங்காலத்தில் இருக்கவில்லை எனவும், அது இடையில் வந்தது எனவும் கூறப்படுகிறது. அக்காலத்தில் திராவிடப் பண்புகளைக் கொண்டிருந்த தமிழ்பண்பாட்டில் தற்போது ஆரியப் பண்பாட்டுக் கூறுகள் மிகுந்து காணப்படுகின்றன.

ஒவ்வொரு சமுதாயப் பண்பாட்டிலும் காலத்துக்குக் காலம் பாரம்பரிய வாழ்க்கை முறைகளுக்கு எதிரான புதிய நிலை எழுவது வழக்கம். இப்புதிய எதிர்ப்புச் சூழல், கல்வி, நாகரிகம், காலமாற்றம் என்பவை காரணமாக ஏற்படுகிறது. பெரும்பாலும் இளைஞர்களிடம் காணப்படும் இந்த எதிர்ப்போக்கு எதிர்ப்பண்பாடு என அழைக்கப்படும்.

முன்னோர், தாய், தந்தையரைப் போற்றுகின்ற நெறிகளை இந்த எதிர்ப்பண்பாடு எதிர்க்கின்றது. இவ்வகை எதிர்ப்பு தலைகாட்டும்போது பெற்றோர்களுக்கும் பிள்ளைகளுக்கும் முரண்பாடுகள் பிரச்சினைகளாகப் பிறக்கின்றன. அங்கே பண்பாடா? பாசமா? எனும் துலாபார ஆட்டம் தலைதூக்குகிறது. இருந்தும் பண்பாட்டில் புதுமாற்றம் இத்தகைய எதிர்ப்பால் ஏற்படாமல் விடுவதில்லை.

மக்கள் சமூகங்கள் தங்களிடையே நிலவும் ஒற்றுமைகளைவிட வேற்றுமைகளுக்குத் தான் முக்கியத்துவம் கொடுக்கின்றன. மற்றவர்களிடமிருந்து வேறுபட்டவர்கள் என்பதையே ஒவ்வொரு சமூகத்தினரும் வெளிப்படுத்துகின்றனர்.

தமிழ்ப்பண்பாடு தற்பண்பை வலியுறுத்துகிறது; மேற்கத்திய பண்பாடு தற்பற்றை வலியுறுத்துகிறது. பண்பாட்டு உறவியல் என்பது முரண்பாடானது. இருந்தும் மாறிவரும் உலகில் மக்களின் எண்ணங்களும் வாழ்க்கை முறைகளும்

ஒரே மாதிரியான, ஒரே தரப்பட்டனவாக ஆகும் நிலை வளர்ந்து கொண்டே வருகிறது. இதன் பிம்பமாக ஓர் உலகப் பண்பாடு அல்லது மக்கள் கலாசாரம் உருவாகி வருகிறது.

ஒரு மொழி பேசும் மக்கள் வாழ்க்கை முன்னேற்றம், உயிர்ப்பாதுகாப்பு, உயர்கல்வி, திரவியம் தேடுதல் போன்ற நோக்கங்களுக்காக மேல்நாடுகளுக்கு வந்து வாழும்போது பண்பாட்டுச் சிக்கல்களை சந்திக்க வேண்டி ஏற்படுகிறது. பண்பாட்டுச் சிக்கல் எனும் பிரச்சினை வாழும் நாட்டு (சமூக) மக்களுடன் தொடர்பு கொண்டிருக்கும், பழகும் சிக்கல்களில் வந்தேறு குடிகளின் பிள்ளைகள் பெரிதும் பாதிப்புக்கு உள்ளாகிறார்கள்

பண்பாட்டில் மாற்றம் இயல்பாக ஏற்படுகிறது. வீட்டில் ஒரு பண்பாடு! வெளியில் ஒரு பண்பாடு! இதனால் இருவகைப் பண்பாட்டையும் கலந்து வாழும் நிலை புதிய தலைமுறையினருக்கு ஏற்படுகிறது. இங்கேதான் தலைமுறை இடைவெளி முளைவிட்டு வளர்கிறது. பொதுவாகத் தமிழ்க் குடும்பப் பெற்றோர்கள் சர்வாதிகாரமான (Authoritarain Parent) போக்குள்ளவர்களாக உள்ளனர். ஆனால் பிரான்ஸ் போன்று சில நாடுகளின் பெற்றோர்கள் ஜனநாயகப் பெற்றோர்களாகவே (Democratic Parent) இருக்கின்றனர். இப்படியான சமூக அமைப்பு பிள்ளைகளுக்கு உரிமை, சுதந்திரம் ஆகிய உணர்வுகளை ஏற்படுத்துகிறது.

இவையும் இரண்டு அல்லது இரண்டுக்கு மேற்பட்ட பண்பாட்டு முறைகளில் வாழுதலும் முறைகளில் வாழும் முறை பண்பாட்டுப்பன்மை எனப்படுகிறது. இவ்வகைப் பண் பாட்டின்முதல் இடைவெளி வெளிக்காட்டலாக மொழி இடை நிற்கிறது. பண்பாட்டின் முதன்மை வெளிப்பாடுகளில் ஒன்றான மொழியானது இப்பண்பாட்டுப் பன்மையில் பொதிந்துள்ள சிக்கல்களை எடுத்துக் காட்டுகிறது.

காலம் மாறுகிறது, கோலம் மாறுகிறது, வாழ்க்கைச் சூழல் மாறுகிறது, இளையோரின் வாழ்க்கை முறையும் மாறுகிறது. ஆனால் "Go Go" System முறையில் காலம் காலமாக வளர்க்கப்பட்ட நாம் பண்பாடுப் பன்மையை ஏற்கப் பின்னிற்பதால் வருத்தம் அடைகிறோம்.

பண்பாட்டுமுறை எதுவாக இருந்தாலும் கூட்டிக் கழித்துப் பார்த்தால் எல்லோரினதும் அடிப்படைப் பண்பாடு ஒன்றுதான்.

பெற்றோர்களின் தாய்மொழி பிள்ளைகளுக்கு வேற்று மொழி ஆகிறது. வாழும் சூழல் மொழியே தாய்மொழி அல்லது முதல் மொழி எனும் நிலைக்கு உரியதாகிறது. ஒருவரின் தாய்மொழி என்பது அவரின் பெற்றோர்களின் மொழியாகத்தான் இருக்க வேண்டும் என்கிற ஓர் எண்ணம் அவரின் பெற்றோர்களின் தாய்நாட்டில் அல்லது தாய்நாட்டு மொழி அவர் வாழும் நாட்டு மொழியாக இருக்கும்போதுதான் பொருந்தும்.

## மொழிகளும் பண்பாட்டுக் காவிகள்தான்

எமது தாய்மொழி தமிழ்! புலம்பெயர் வாழ்வில் பிறந்த எமது பிள்ளைச் செல்வங் களுக்கும் தமிழ்தான் தாய்மொழி என எம்மில் அநேகம் பேர் நம்புகிறோம். இது பிழையா? தாய்மொழி எனும்போது அது ஒருவரின் தாயின்மொழி என்றே நாம் நினைத்து விடுகி றோம். இது சரியா?

ஒருவன் சிறுவயதில் கற்றுக்கொண்டதும், சிந்திக்கவும், கருத்துகளைப் பரிமாறவும் இயல்பாக ஒருவனுக்கு உகந்ததும் தாய்மொழி தன்னைப் பற்றியும் உலகைப் பற்றிய கருத்துகளை முதன்முதலில் உருவாக்கவும் வெளியிடவும் உதவுவது தாய்மொழி. ஒருவரின் தாய்மொழி என்பது அவரின் பெற்றோரின் தாய்மொழியாக எப்போது அமையும் எனில் அவரின் பெற்றோரின் தாய்நாட்டில் அவர் வாழும்போதும் அல்லது அவரின் தாய்நாட்டு மொழி மற்றுமொரு

நாட்டுமொழியாக இருக்கும்போதுமேயாகும்.

கொழும்பில் ஒரு குடும்பம் : கணவன் சிங்களம், மனைவி தமிழ். இருவரும் தங்களிடையே ஆங்கிலத்திலேயே பேசுவார்கள். பிள்ளைகளிடம் ஆங்கிலத்திலும் சிங்களத்திலும் உரையாடுவார்கள். கணவன் மனைவியிடம் சிலவேளைகளில் சிங்களத் தமிழில் செல்லம் கொஞ்சுவார். வாழும் சூழல் மொழி சிங்களமாக உள்ளதால் பிள்ளைகளுக்கு அந்தப் பாஷை தாராளமாகச் சரளமாக வந்தது. ஆனால் இப்போது சுவீடனில் அக்குடும்பம் வாழுகிறது. இங்கு வந்த புதிதில் ஆங்கிலமும் சிங்களமும் பேசியவர்கள் இன்று ஆங்கிலத்திலும் கூடிய வீதம் சுவீடியத்திலும், குறைவாகச் சிங்களத்திலும் பேசுகிறார்கள். கொழும்பில் சிங்களம் வகித்த இடத்தை உப்சாலாவில் சுவீடியம் எடுத்துக்கொண்டது. பிள்ளைகளுக்குச் சிங்களம் பேசுவதற்கான சூழ்நிலைகுறைந்துவிட்டது.அவர்களுக்குத் தாயின் மொழியான தமிழும் தெரியாது. ஆனால் வாழும் நாட்டு சூழல்மொழிதான் நன்றாக வருகிறது. அதுதான் அவர்களின் முதல்மொழியாக இருக்கிறது. நாப்பழக்கம் இருந்தால்தானே செந்தமிழும் வரும். தன்கருத்துகளை முதன்முதலில் வெளியிடப் பயன்படுத்தும் மொழி அவனின் தாய் தந்தையரின் மொழியாக இருக்கவேண்டும் என்பதில்லை. முதன் முதல் அவன் பேசக் கற்றுக்கொண்ட மொழியாகவும் இருக்கவேண்டும் என்பதில்லை. ஏனெனில் குறிப்பிட்ட காரணங்களினால் ஒரு மனிதன் முதல்முதல் பேசப் பழகிய மொழியை முற்றாக மறந்துவிடவும் கூடும். இதன் காரணமாக பெற்றோர்களின் தாய்மொழி பிள்ளைகளுக்கு வேற்றுமொழி ஆகலாம். இந்த நடைமுறையைக் கருத்தில் கொண்டுதான் யுனெஸ்கோ தாய்மொழி (The Use of veracular Languages in Education, Report of the Unesco, Paris 1953) என்றால் என்ன என்பதற்குப் பின்வருமாறு விளக்கம் கோருகிறது.

1) பெற்றோர்களுடைய தாய்மொழியும், பிள்ளைகளின் தாய்மொழியும் ஒன்றாக இருக்கவேண்டும் என்ற நியதி இல்லை.

காதால் கேட்டு, திருப்பிச் சொல்லுகிற முறையே இயல்பாகப் பேசும் முறை. பத்து வயதுக்குப் பிறகு சொந்த மொழிக்கேற்பவே நாக்கு இசைவாக்கம் அடைந்துவிடுகிறது. ஒரே இன மொழிகளைக் கற்பதில் கடினம் இருக்காது. ஆகவே நமது வழித்தோன்றல்களைக் குறைந்த வயதில் பிறமொழிகளைப் படிக்கவைப்பது கூடிய பலனைத் தரும்.

2) ஒன்று அல்லது ஒன்றுக்கு மேற்பட்ட மொழியும் ஒருவனுக்குத் தாய்மொழியாக அல்லது தாய்மொழிகளாக அமையும்.

3) ஒருவனின் வாழ்க்கையில் தாய்மொழி மாறிக்கொண்டே போகலாம்.

ஒருவன் தன் கருத்துகளை உரையாடல் மூலம் வெளியிடவும் பிறர் கருத்துகளை உரையாடல் மூலம் உள்வாங்கிக் கொள்ளவும் வாழ்நாளில் தொடர்ந்து உதவும் ஒன்றோ அல்லது பல மொழிகளோ ஒருவனுடைய தாய்மொழி / தாய்மொழிகள் என விளக்கம் கொடுக்கலாம். புலம்பெயர் வாழ்வில் தாய்மொழியை வரையறுப்பதில் இத்தகைய நடைமுறைச் சிக்கல்கள் இருப்பதால், இக்காலத்தில் முதல் மொழி இரண்டாம் மொழி, மூன்றாம் மொழி எனும் கோட்பாடு தோன்றியது. இந்த எண்ணுமுறைப் பெயர் மொழிகள் ஒருவன் மொழியைப் பேசவோ அல்லது எழுதவோ அறிந்துகொண்ட முறையைக் குறிப்பிடுகிறது. பெரும்பாலான குழந்தைக்ள 5-6 வயதுகளில் தமது மொழிககளின் ஒலி அமைப்புகளை நன்றாகக் கற்றுக்கொள்கிறார்கள். ஒரு மொழியை எந்த வயதில் கற்கிறோம் என்பதில்தான் அதன் இலகுவும் கடினமும் தங்கி இருக்கிறது.

பத்து வயது ஆகுமுன் எத்தனை மொழிகள் ஆனாலும் இயல்பாகப் பேசும் முறையில் படித்தால் அவற்றைச் சுலபமாகவும் ஒரே அளவிலான முயற்சியுடனும் கற்றுக்கொள்ளலாம். காதால் கேட்டு, திரும்பிச் சொல்லுகின்ற முறையே இயல்பாகப் பேசும் முறையில் படித்தால்

அவற்றைச் சுலபமாகவும் ஒரே அளவிலான முயற்சியுடனும் கற்றுக்கொள்ளலாம்.

சமூகத்தில் பண்பாட்டில் ஏற்படும் எதிர்ப்பண்பாடு, பண்பாட்டுப்பன்மை, தாய்மொழி முதல் மொழி ஆகியன தவிர்க்கப்பட முடியாதவை. உலகில் எதுவும் மாற்றத்திற்கு உள்ளாகாமல் இல்லை. ஏனென்றால் இயக்கத்துக்கு உட்படாமல் எதுவும் இல்லை.

நாகரிக வாழ்க்கை, பாரம்பரிய பண்பாட்டில் ஓயாத எதிரப்பண்பாடுகளை ஏற்படுத்தி வருவதனால் நடைமுறை வாழ்க்கை இடையறாது மாறிக் கொண்டே இருக்கிறது. ஒரு குறிப்பிட்ட பண்பாடு அந்த நிலப்பகுதியில் தொடர்புடையதாக இருப்பதனால், குறைவான மாறுதலுக்கே உள்ளாகிறது.

ஆனால் ஒரு குறிப்பிட்ட பண்பாட்டுக்கு உரியவர்கள் இன்னொரு நாட்டில் குடியேறி வாழும்போது, தம் பண்பாட்டைப் பேணுவதற்குப் பண்பாட்டு நிகழ்ச்சிகள், விழாக்கள் போன்றவற்றைத் தொடர்ந்து செய்து வருவது பண்பாட்டை வாழச்செய்யும். தலைமுறை இடை வெளிகளைக் குறுக்கும். இளம் தலைமுறைகளுக்குத் தாய், தந்தையரின் சமூகம் பற்றிய ஏக்கத்தை உண்டாக்கும்.

தமது பண்பாட்டை நிலைநாட்ட வேண்டும், பேண வேண்டும் என்பது நடைமுறையில் ஒரு சிறு போராட்டமாக அமையும். தத்தம் பண்பாட்டு விழாக்களை, நிகழ்ச்சிகளை கொண்டாடிவருவது பண்பாட்டை மறக்கவிடாமல் இருக்கத் துணைபுரியும்,

ஒரு சமுதாயம் உலகத்தைப்பற்றி என்ன கருத்துக் கொண்டிருக்கிறது என்பதைப் பொறுத்து, அதன் சமூக பொருளாதார வளர்ச்சி அமைகிறது. பிறரின் பண்பாடு பற்றிய அறிவு, தேடல்கள், கண்ணோட்டங்கள் ஒருவருக்கு அவசியம். பிறரின் பண்பாட்டை இழிவாகக் கருதி நிராகரிக்கும் போக்கு பண்பாடானது அல்ல. மாறாக, திறந்த மனதும் வரவேற்கும் தன்மையும் கொண்டு நோக்க வேண்டும். சொந்தப் பண்பாட்டில் வேரூன்றி நின்று, பிற பண்பாடுகளைத் திறந்த மனத்துடன் மதிப்பது மனிதப் பண்பாடு ஆகும்.

**சான்றாதார நூல்கள்:**


1.The Record of Mankind (heath)

2.Definir les objectifs de l'educatibn – Viviabe et Gilbert De Landsheere.

3.The use bf Vernacular Language in Education ReaPbrt bf the UNESCO


## சூரியன் – ஒருபொட் பன்மொழி

அரி, அலரி, அழலவன், அனலி, ஆயிரங்கதிரோன், ஆயிரஞ்சோதியுள்ளோன், இருள்வலி, இனன், எல், எல்லி, எல்லை, எல்லோன், என்றூழ், ஒளியோன், கதிரவன், கதிரோன், கனலி, கனலோன், சான்றோன், சுடரோன், சூரன், சூரியன், செங்கதிர், செங்கதிரோன், செஞ்சுடர், ஞாழித்தேரோன், பகல், பகலவன், பகலோன், பகவன், பரிதி, பனிப்பகை, பொழுது, மணி, மாலி, விண்மணி, விரிச்சிகன், வெஞ்சுடர், வெய்யோன், வெயிலோன், வேந்தன்

# சொல்லாக்க வழிமுறை



மரு. சுப. திருப்பதி
முதன்மை மூளை நரம்பியல்அறுவையியல் மருத்துவர்,
திருச்சிராப்பள்ளி

மரு. சு. கார்த்தி,
குழந்தைநலம் (ம) பொது மருத்துவர், ஈரோடு



சொல்வயல் தன்னைப் பரந்து நோக்குங்கால்,

| | | |
|---|---|---|
| நிலம் | = | மனம் |
| நீர் | = | மொழி |
| கலப்பை | = | கல்வி |
| விளைச்சல் | = | அறிவு |
| களஞ்சியம் | = | நினைவு |
| விதை நெல் | = | சிந்தனை |

சொல் ஏர் உழவர்[1] ஆனவர் மாந்தர் அனைவரும்.இந்த விலங்கு உலகத்தில் நாம் மாந்தராக இருந்து ஆதிக்கம் செலுத்துவதற்கு நாம் இரண்டு வினைத்திறன்களுக்குக் கடப்பாடு உடையவர்கள் :

1.சொல்வடிவான சின்னங்களை/ அடையாளங்களை நமக்கே உரிய கருத்துருவத்திற்கான பின்புலமாகக் கொண்டும், பேச்சாகவும் எழுத்தாகவும் சொற்களைக் கொண்டு நம்மைப் போன்ற மற்றவர்களுக்கு, எண்ணங்களைச் செலுத்தகூடிய ஒரு வழிவகையாக வளரச்செய்து பயன்படுத்தக்கூடிய ஆற்றல்.

2. கைகளைப் பயன்படுத்தும் குறிப்பிடத்தகுந்த எளிமை நயம்.[2]

இன்னவன் சொல்லுவது இதுவென மயக்கமின்றி அறிந்து கொள்ளும் அறிவு மனிதனுக்கு இருந்தாற் போதும்; உலகம் வாழும்.[3]

எந்தக் கருத்தியலான சிந்தனையையும் சொல் அல்லது கணக்கியல் (எண்கள்) குறியீட்டு அடையாளங்களாக/ சின்னங்களாகத்தான் மனத்தின் பிடிப்பில் வைத்திருக்க முடியும். இவ்வாறு சொற்கள், நம்முடைய சிந்தனை இயக்கத்தின் ஒருங்கிணைந்த கூறாகவும், நமக்காகவும் மற்றவர்களுக்காகவும் உரிய நம் சிந்தனைகளின் பாதுகாப்புப் பெட்டகங்களாகவும் விளங்கிவருகின்றன. [4]

*'எண்ணும் எழுத்துங் கண்ணெனத் தகும்.'*[5]

*'எண்ணென்ப ஏனை எழுத்தென்ப*
*இவ்விரண்டும்*

*கண்என்ப வாழும் உயிர்க்கு'* [6]

எண்கள் சார்ந்த சிந்தனை மாந்தர் அனைவர்க்கும் ஒன்றாக இருக்கலாம்; ஆனால் எழுத்து சார்ந்த சிந்தனை ஏனைப் பலவாறாக இருப்பதுதான் இயற்கை இயல்பு (Language Diversity)

அடையாளமான தொடர்பைக் குறிப்பது மொழி. அது உரையாடல், புரிந்துகொள்ளுதல், திரும்பவும் கூறுதல், படித்தல் மற்றும் எழுதுதல் ஆகியற்றைச் செயலாற்றக்கூடிய திறனாகும்.

மொழித் திறன் என்பது கருத்துரையான தொடர்புக்குரிய ஒலிகள் மற்றும் அடையாளங்களைப் புரிந்துகொள்ளவும் உருவாக்கவும் கூடிய மைய செயலாக்கத்தினைச் சார்ந்ததாகும்.[7]

நடைமுறையில் மொழி என்பதனைப் பேச்சாகவும் எழுத்தாகவும் மட்டுமே கருதுகின்றோம். இதனை ஒட்டியே மொழித்தூய்மை எனவும் எழுத்துச் சீர்திருத்தம் எனவும் கருத்தாடல் (விவாதம்) செய்கின்றோம்; தற்காப்பு உணர்ச்சிப் பெருக்காகவே அணுகுகின்றோம். பெரும்பாலும் பொருளாதாரத் தேவையை முன்னிட்டு நாம் பல மொழிகளில் பேசுகின்றோம், படிக்கின்றோம், எழுதுகின்றோம்; தேவையென்றவாறும் தேவைக்கெனவும் மொழிகளின்வாயிலாகப் பலவாறு கற்கின்றோம்.

ஒரு கேள்வி – எந்த மொழியில் சிந்திக்கின்றோம்?

இதற்கு விடை காணுவதற்கு அறிவியல், மரபியல், விலங்கியல், மெய்யியல் மற்றும் உடற்கூறு (குறிப்பாக மூளை) இயங்கியல், உளவியல், மொழியியல், கல்வியியல், சமூகவியல், அகப்புற இடக் காலச்சூழலியல், அரசியல் உள்ளிட்ட பல அணுகுமுறைகள் இன்றியமையாதவை.

இந்த மண்ணுயிர் உலகியலில், அடிப்படையாக மொழி என்பது இரு வகைப்படும்:

- உணர்ச்சி மொழி – Emotional Language
  - – உயர் விலங்கினங்கள் தமக்குள், தம் அக்கணநேர உணர்வுகளையோ அல்லது எதிர்ச்செயல்களையோ தெரிவிக்கும் பொருட்டு ஒலிப்பாகவும் சைகையாகவும் வெளிப்படுத்த இயலுகிற மொழிவடிவம்.
  - – அதே போன்று,
    - o மனிதர்களில் நுண்ணியதாய்க் காணப்படும் இயல்புணர்ச்சி வாய்ந்த, உணர்ச்சிக் குறிப்புணர்த்தும் உடலுறுப்பசைவியக்க வெளிப்பாடுகள்.
  - பச்சிளம் குழந்தைப்பருவத்தே தொடக்கமாகப் புலப்படகூடிய வெளிப்பாட்டுக் கூறுகள்.
  - நாம் மகிழ்ச்சி, சினம் மற்றும் அச்சம் போன்றவற்றை வெளியிட்டுரைக்கப் பயன்படுத்தும் உணர்ச்சி வெளியிட்டுத் தெரிவிக்கைகள்

    ஆகியன உணர்ச்சி மொழி எனப்படும்
  - – இதுஆதிமனிதரின் மூலமுதலான, பேச்சுவடிவமாக இருக்கக்கூடும்.
  - – உணர்ச்சி வெளிப்பாடுகளுக்குச் செயல்துணையாகப் பயன்படும் இந்த உடற்கூற்றுமொழியியல் (paralinguistic) தெரிவிப்புகளாவன:
    - • ஒலியலை எழுச்சித்தாழ்வு – Intonation
    - • வியப்பொலிகள் – Exclamations
    - • முகபாவங்கள் – Facial Expressions
    - • கண்ணசைவுகள் – Eye Movements
    - • மெய்ப்பாட்டசைவுகள்– Body Gestures

• கருத்து அல்லது அடையாள மொழி – Propositional or Symbolic Language

இவ்வகை மொழி, உணர்ச்சி மொழியிலிருந்து பலவகைகளில் வேறுபடும்.

- – இது உணர்வுகளைத் தெரிவிப்பதற்குப் பதிலாக, தனியொருமனிதரிடம் உள்ள கருத்து எண்ணங்களை மற்றொருவருக்கு மாற்றப்பெறும் வழிவகையாகும்; பொருட்கள், ஆட்கள் மற்றும் கருத்துப்படிவங்களுக்கு உரிய பதிலீடாக, ஒலிகள் அல்லது குறிகளின்தொகுதி அதற்குத் தேவைப்படுகிறது. இதுதான் மொழியின் சாரமாகும்.
- – இது இயல்புணர்ச்சி அன்று; கற்றறிந்தது; ஆகையால், மாறுபாடுடைய சமூக மற்றும் கலாச்சாரச் சூழல் விளைவுகளுக்கு ஆட்படுகின்றது [8]

மொழியானது, அனுபவங்களையும் சிந்தனைகளையும், அவற்றைச் சொற்கள் என்னும் தன்னிச்சையான அடையாளங்களுடன்/சின்னங்களுடன் இணைத்து, தொடர்புகொள்ளவும் மாற்றியமைக்கவும் இடமளிப்பதாகும். [9]

தன்னுட்பேசுவதும், ஒருவருக்குச் சொல்லுவதும், உலகோருக்கு உரைப்பதும் எனச் சொல் பல திறப்படும்.[10]

- o புறமொழி (ExternalspeechorExophasy)
- o அகமொழி – தனியான தன்மொழி (Innerspeechor Endophasy) [11]

சிந்தனையும் மொழியும் இணைபிரியாதவை. குழந்தையானது சிந்திக்கக் கற்றுக்கொள்ளும் பொழுது, தனக்குத்தானே உரக்கப் பேசிப்பயிலும்; பின்னர்தான் குரல் வெளிப்பாட்டை அடக்கிக்கொள்ளக்

கற்றுக்கொள்ளும். வயதுவந்தவர்கள்கூட கடினமான ஆய்வுப்பொருட்களை நீளநினையும் பொழுது அடிமனதளவில் தன்னையறியாமல் முணுமுணுக்கக்கூடியவர்களாக இருப்பார்கள்.

> மொழியின் அறிவாழமிக்க முக்கியத்துவத்தை, ஒருவர் தம்முடைய மதிப்பளவு நேரத்தை முற்றிலும் சொற்குறித்த நாட்டங்களில் ஈடுபாடு கொண்டு பிரதிபலித்தால் தவிர, முழுமையாகச் சரியாகப் புரிந்துகொள்ள இயலாது . [12]

எம்மொழியில் கற்றாலும், ஆழ்மனதில் நாம் நம் இல்லத்தில் புழங்கும் மொழியிலேயே, மொழிபெயர்ப்பு செய்துகொண்டே அகமொழியாகக் கற்று வருகின்றோம். அதை ஒட்டிய சிந்தனைகளும் பெரும்பாலும் இல்லத்து மொழியிலேயே எத்தனித்து, அதனை வெளிப்படுத்தும் பொருட்டு வேறு மொழியிலோ, நம் அடிப்படையான தாய்மொழியிலோ சொற்களைத் தேடுகின்றோம்.

மனிதன் சிந்தனைவயப்பட்டவன். சிந்தனை என்பது தற்சிந்தனையாய்ச் சிறக்கவேண்டும். வழிவழிச்சிந்தனையையுடன் தற்காலச் சிந்தனையைத் தொடர்புப்படுத்தியும் ஒப்பிட்டும் இணைத்தும், புறச்சிந்தனைகளைச் சீர்தூக்கியும் பகுத்தறிந்தும் தற்சிந்தனையானது உருவாகவேண்டும்; அடுத்த தலைமுறைக்குக் கடத்தவேண்டும். இதனைச் செவ்வனே செய்வதற்கு மொழிதான் முதன்மையான கருவியாகும்.

தாய்மொழிக்கல்வியே தற்சிந்தனைக்கு ஆக்கம் தரும் என்பது உலகியலார் மறுக்கமுடியாத உண்மை.

**நம் தாய்மொழி தமிழ். சங்ககாலம் தமிழின் பொற்காலம் என்று கருதப்படுகிறது. ஏன்?**

> சங்கப்பாடல்களைப் புனைந்த புலவர்களில் சமுதாயத்தின் எல்லாப் பிரிவினைச் சேர்ந்தவர்களும் இருக்கின்றனர். அரசர், அமைச்சர், அந்தணர், வணிகர், கணக்கர், வேடர், அறுவை வணிகர், கூலவாணிகர், காவற்பெண்டு, கொல்லர், குயவர் என எல்லா வகையான தொழில் துறைகளில் இருந்தும் புலவர்கள் உருவாகியிருக்கிறார்கள்; பாடியிருக்கிறார்கள் .[13]

ஆனால் காலப்போக்கில், தமிழ் என்பது ஒரு பாடப்பிரிவு எனவும், ஊடகங்களின் மொழி எனவும், மேடைப்பேச்சுகளுக்கான சொல்லாடல் எனவும், தமிழ் மொழியைப் பாடமாகக் கற்றோர் ஒருசாராருக்கே உரியது எனவும் கருதி, பல்துறை சமகாலத் தன்திறன் பல்திறன் ஆளுமை மிக்கோர் பலரும் ஒதுங்கிவிட்ட நிலைமை ஏற்பட்டுவிட்டது.

தொன்மை மரபிருந்தும், சொல் வளம் இருந்தும் உலகவோட்டத்தில் சற்றுப் பின்தங்கிவிட்டோம்.

> தமிழ் இன்று ஒரு மாநிலமொழிமட்டுமன்று. ஒரு நாட்டு மொழி மட்டுமன்று. இன்று அது ஒரு குவலயக் குடும்பத்தின் தாய்மொழி .[14]

"*சென்றிடுவீர் எட்டுத்திக்கும், கலைச்செல்வங்கள் யாவும் கொணர்ந்திங்குச் சேர்ப்பீர்*", என்றார் பாரதியார். தமிழர்களின்அறிவாற்றலை ஒன்றுதிரட்ட வேண்டும்[15]. இதுவே இன்றைய முதன்மைத்தேவை. அதற்கான சிறப்பான செயல்பாடுதான், தமிழ்நாடு அரசு, தமிழ் வளர்ச்சித்துறை, செந்தமிழ்ச் சொற்பிறப்பியல் அகரமுதலித் திட்ட இயக்ககம் தொடர்ந்து நடத்திவரும் இணையவழிப் பன்னாட்டுக் கலைச்சொல்லாக்கப் பயிலரங்கம் ஆகும்.

இந்தப் பயிலரங்கில் பங்கேற்று, அறிவியல்சார் ஆங்கிலச்சொற்களுக்கு இணையான தமிழ்ச்சொற்களை உரியவாறு பயன்பாட்டுக்கு உள்ளாக்கவும், தக்க புதிய சொற்களை முன்வைக்கவும் வாய்ப்பு அமைந்தது.

இதற்குச் சில புரிதல்கள் அடிப்படையாகத் தேவைப்பட்டன.

1. கீழ்க்கண்டவற்றிற்கு இடையேயான வேறுபாடு உணரப்பட்டது
   - மொழிமாற்றம்
   - மொழிபெயர்ப்பு
   - மொழிப்படுத்தல்
   - மொழியாக்கம்

2. ஒருசொல்லுக்குரிய தன்மைகள் இவையெனக் கொள்ளப்பட்டன:
   - எளிமை
   - பயன்பாடு
   - மரபு
   - மக்கள்வழக்கு

- புரிதல்
- பழக்கம்
- காலமாற்றம்
- அறிவியல்தன்மை
- மதிப்பு
- அச்சமின்மை
- திரிபு/மயக்கமின்மை
- பொருள்

மேலும் சில கேள்விகளும் வரையறைகளும் நெறிமுறைகளும் வழிகாட்டுதலும் தேடுதலுக்கு உள்ளாகின. இவற்றுக்கான விடை பகரும் பற்றுக்கோடாக வாய்த்தது நம் தொல்காப்பியம்:

- சொல் எதனை உணர்த்தி ஆகி வரும் ?

சொல் தன்னையும் பொருளையும் உணர்த்தும் – சொல்லுணர்த்தும் பொருளின் தன்மையை அறிதலும், அச்சொல்லின் தன்மையையே அறிதலும் சொல்லினால் ஆகும்

*பொருண்மை தெரிதலும் சொன்மை தெரிதலும்*

*சொல்லின் ஆகும் என்மனார் புலவர்* [16]

- சொல் எதனைக்குறிக்கும்?

*எல்லாச் சொல்லும் பொருள் குறித்தனவே*[17]

- சொல் எவ்வாறு பொருள் உணர்த்தும்?

சொல் வெளிப்படையாகவும் குறிப்பாகவும் பொருளுணர்த்தும் .[18]

*தெரிபுவேறு நிலையலும் குறிப்பின் தோன்றலும்*

*இருபாற் றென்ப பொருண்மை நிலையே.*

- அத்தகைய பொருளை உணர்தற்குரிய நெறிமுறை யாது?

ஒன்றற்குக் கூறப்பட்ட பொருளுக்குப் பொருளென்ன என ஆராய்ந்து சென்றால், அஃது எல்லையற்றுப் போகும்.

கூறப்பட்ட ஒருபொருளுக்குப் பொருளென்ன என வினவிக்கொண்டே போதல் கூடாது [19]

*பொருட்குப் பொருள்தெரியின் அதுவரம்பின்றே*

- அருஞ்சொல் என்பதன் தன்மை யாது?

சொல்லுக்கும் அதன் பொருளுக்கும் உள்ள தொடர்புக்கான காரணம் யாது என்பது முழுவதும் விளங்கத்தோன்றாது. [20]

*மொழிப்பொருட் காரணம் விழிப்பத் தோன்றா*

- பெயர்ச்சொல், வினைச்சொல், இடைச்சொல், உரிச்சொல்[21,22] ,

*சொல்லெனப் படுபபெயரே வினை என்று ஆயிரண்டென்ப அறிந்திசி னோரே*

*இடைச்சொல் கிளவியும் உரிச்சொல் கிளவியும் அவற்றுவழி மருங்கில் தோன்றும் என்ப*

என மொழியின் அடிப்படையில் சொல் நான்கு வகைப்பட்டாலும்,செய்யுளில்,பயன்பாட்டில்,இயல்பும் இடமும் கருதி மேலும் வேறு நான்காக வகைப்படும். அவை:

- இலக்கியத்தில் நான்குவகைச் சொற்கள்[23] (தொல்.880)

*இயற்சொல் திரிசொல் திசைச்சொல் வடசொல் என்று*

*அனைத்தே செய்யுள் ஈட்டச் சொல்லே.*

1.இயற்சொல் [24]

அவற்றுள்
இயற்சொல் தாமே
செந்தமிழ் நிலத்து வழக்கொடு சிவணித்
தம்பொருள் வழாமை இசைக்கும் சொல்லே

2.திரிசொல்[25]

ஒருபொருள் குறித்த வேறுசொல்லாகியும்
வேறுபொருள் குறித்த ஒருசொல்லாகியும்
இருபாற்று என்ப திரிசொல் கிளவி

3.திசைச்சொல் [2]

செந்தமிழ் சேர்ந்த பன்னிரு நிலத்தும்
தம்குறிப்பினவே திசைச்சொற் கிளவி

4.வடசொல் [27]

வடசொற் கிளவி வடவெழுத்து ஒரீஇ
எழுத்தொடு புணர்ந்த சொல்லா கும்மே

•பிறமொழிச் சொல்லைத் தமிழ்ஒலி வடிவப்படுத்தலாமா?

பலதிரிபுகள், மாற்றங்கட்கு உட்படுத்தப்பட்டுத் தமிழ்வடிவப்பட்டு வரினும் ஏற்கலாம்[28]

*சிதைந்தன வரினும் இயைந்தன வரையார்*

- சொல் மரபை எவ்வாறு போற்றிப் பேணுவது?

1.உயர்ந்தோர் வழக்கே மரபாகும் 29

*வழக்கு எனப்படுவதுஉயர்ந்தோர் மேற்றே*

*நிகழ்ச்சி அவர்கட்டு ஆகலான*

2.சொல்மரபு மாறுதல் கூடாது30

*மரபுநிலை திரிதல் செய்யுட்கு இல்லை*

*மரபு வழிப்பட்ட சொல்லினான*

3.மரபு மாற்றமுடியாதது, மாற்றக்கூடாதது 31

மரபு மாறினால் , பொருளுணர்வுகள் வேறுவேறாகிவிடும்.

சொல்வோன் கருத்துக் கேட்பவனுக்குப் போய்ச்சேராது

*மரபுநிலை திரியின் பிறிதுபிறிது ஆகும்*

- சொற்களை உணர்ந்துகொள்ளும் திறன் எதனைப் பொறுத்துள்ளது?

பொருள் உணர்தலுக்கான வழி, உணர்வோர்தம் உணர்ச்சி, அறிவு வலிமையையும் பொறுத்துள்ளது 32

*உணர்ச்சிவாயில் உணர்வோர் வலித்தே*

- சொற்களை உணர்த்தும் திறன் எத்தகையது?

கூறுவோன் தக்கமுறையில் பொருளுணர்த்த வல்லனாயின், கேட்போனுக்குத் தான்கேட்ட பொருட்கண் மயக்கமுண்டாகாது 33

*பொருட்குத் திரிபில்லை உணர்த்தவல்லின்*

மேற்கூறிய அடிப்படையில் எந்தவொரு விரிவான மொழிக்கோட்பாடுகளையும் விளக்கங்களையும் சம்பந்தமான செயல்முறைகளையும், தற்காலச் சூழலுடன் பொருத்தியும் அணுகவேண்டும்.

நமது சிந்தனையின் எல்லைகளில் விரிவு வேண்டும். நமது அணுகுமுறையில் ஆழம் வேண்டும். நுட்பம் வேண்டும். இறுக்கம் (Rigidity) தவிர்த்த இளக்கம் (Flexibility) வேண்டும். மாற்றங்களை ஏற்கும் மனநிலை வேண்டும்.34

ஒரு மனிதனின் இந்த உலகியலின் இருப்பு மற்றும் பங்களிப்பானது, வளர்ச்சி நோக்கமுடையது. தன் வளர்ச்சி புரந்து, பரிமாண வளர்ச்சி அடைந்து, பரிணாம வளர்ச்சிக்குப் பங்களிக்கும் கடப்பாடும், கடமையும் உடையவன் மனிதன்.

*தம்மின்தம் மக்கள் அறிவுடைமை மாநிலத்து*

*மன்னுயிர்க் கெல்லாம் இனிது*35 .

இதனை உணர்ந்து அனைவரும் தத்தம் வழிகளில் ஒருங்கே செயலாற்றுவோமாக.

.....................................................................................................


1. திருக்குறள் 872

2. (Translation) Victor V, Ropper AH: Disordersofspeechandlanguage, Adam'sandVictor'sPrinciplesofNeurology 7th ed, pg 499–500

3. வ.சுப. மாணிக்கம்: உழவப் புலவன், மனைவியின் உரிமை. முதல் பதிப்பு. தமிழ் நிலையம், புதுக்கோட்டை 1947 : 27

4. (Translation) Victor V, Ropper AH: Disordersofspeechandlanguage, Adam'sandVictor'sPrinciplesofNeurology 7th ed, pg 499–500

5. ஔவையார்; கொன்றைவேந்தன்

6. திருக்குறள் 392

7. (Translation) Christopher G. Goetz: Textbook of clinical Neurology

8. (Translation) Victor V, Ropper AH: Disordersofspeechandlanguage, Adam'sandVictor'sPrinciplesofNeurology 7th ed, pg 499–500

9. (Translation) Harrison's principles of internal medicine

10. வ.சுப. மாணிக்கம்: உழவப் புலவன், மனைவியின் உரிமை. முதல் பதிப்பு. தமிழ் நிலையம், புதுக்கோட்டை 1947 : 26

11. (Translation) Victor V, Ropper AH: Disordersofspeechandlanguage, Adam'sandVictor'sPrinciplesofNeurology 7th ed, pg 499–500

12. (Translation) Victor V, Ropper AH: Disordersofspeechandlanguage,

Adam'sandVictor'sPrinciplesofNeurology 7th ed, pg 499–500

13. வா.செ. குழந்தைசாமி, உலகச்செவ்வியல் மொழிகளின் வரிசையில் தமிழ். மூன்றாம் பதிப்பு; பாவை பப்ளிக்கேஷன்ஸ் 2011 : 35

14.வா.செ. குழந்தைசாமி, உலகச் செவ்வியல்மொழிகளின் வரிசையில் தமிழ். மூன்றாம் பதிப்பு; பாவை பப்ளிக்கேஷன்ஸ் 2011 :25

15. வா.செ. குழந்தைசாமி, உலகச்செவ்வியல் மொழிகளின் வரிசையில் தமிழ். மூன்றாம் பதிப்பு; பாவை பப்ளிக்கேஷன்ஸ்2011 :91–97

16. தமிழண்ணல்; தொல்காப்பியம் (641)–மூலமும் கருத்துரையும்(சொல்லதிகாரம் – பெயரியல்)

17தமிழண்ணல்; தொல்காப்பியம் (640)– மூலமும் கருத்துரையும்(சொல்லதிகாரம் – பெயரியல்)

18. தமிழண்ணல்; தொல்காப்பியம் (642)–மூலமும் கருத்துரையும் (சொல்லதிகாரம் – பெயரியல்)

19. தமிழண்ணல்; தொல்காப்பியம் (874) –மூலமும் கருத்துரையும் (சொல்லதிகாரம் – உரியியல்)

20. தமிழண்ணல்; தொல்காப்பியம் (877)– மூலமும் கருத்துரையும் (சொல்லதிகாரம் – உரியியல்)

21. தமிழண்ணல்; தொல்காப்பியம் (643)– மூலமும் கருத்துரையும் (சொல்லதிகாரம் – பெயரியல்)

22. தமிழண்ணல்; தொல்காப்பியம் (644)– மூலமும் கருத்துரையும் (சொல்லதிகாரம் – பெயரியல்)

23. தமிழண்ணல்; தொல்காப்பியம் (880)–மூலமும் கருத்துரையும் (சொல்லதிகாரம் –எச்சவியல்)

24. தமிழண்ணல்; தொல்காப்பியம் (881)–மூலமும் கருத்துரையும்(சொல்லதிகாரம் –எச்சவியல்)

25. தமிழண்ணல்; தொல்காப்பியம் (882)–மூலமும் கருத்துரையும்(சொல்லதிகாரம் –எச்சவியல்)

26. தமிழண்ணல்; தொல்காப்பியம் (883)–மூலமும் கருத்துரையும்(சொல்லதிகாரம் –எச்சவியல்)

27. தமிழண்ணல்; தொல்காப்பியம் (884)–மூலமும் கருத்துரையும்(சொல்லதிகாரம் –எச்சவியல்)

28. தமிழண்ணல்; தொல்காப்பியம் (885)–மூலமும் கருத்துரையும்(சொல்லதிகாரம் –எச்சவியல்)

29. தமிழண்ணல்; தொல்காப்பியம் (1592)–மூலமும் கருத்துரையும்(பொருளதிகாரம் – மரபியல்)

30. தமிழண்ணல்; தொல்காப்பியம் (1590)–மூலமும் கருத்துரையும் (பொருளதிகாரம் – மரபியல்)

31. தமிழண்ணல்; தொல்காப்பியம் (1591)– மூலமும் கருத்துரையும்(பொருளதிகாரம் – மரபியல்)

32. தமிழண்ணல்; தொல்காப்பியம் (876)– மூலமும் கருத்துரையும்(சொல்லதிகாரம் – உரியியல்)

33. தமிழண்ணல்; தொல்காப்பியம் (875)– மூலமும் கருத்துரையும் (சொல்லதிகாரம் – உரியியல்)

34. வா.செ. குழந்தைசாமி, உலகச் செவ்வியல்மொழிகளின் வரிசையில் தமிழ். மூன்றாம் பதிப்பு; பாவை பப்ளிக்கேஷன்ஸ் 2011 : 26

35. திருக்குறள் 69


vikaspedia

| | |
|---|---|
| Aircraft Shed | வானூர்தி நிறுத்துமிடம் |
| Side Line | பக்கப் பாதை |
| Tail Lamp | வால் விளக்கு |
| Tail Wheel | வால் உருளி |
| Tachometer | வேகமானி |
| Aileron | வானூர்தி நிலைநிறுத்தி |
| Air Lock Strip | வானூர்தி வளிநிலைப்படுத்தி |
| Projectile | வானூர்தி ஏவுகை |
| Radio Telegraphy | அலைவழித் தொலைவரி |
| Radio Telephony | அலைவழித் தொலைபேசி |
| Antiaircraft | வான்படைத் தகர்ப்பு |
| Aviette | மிதி வானூர்தி |
| Airstrip | காற்றுப்பட்டை |
| Space Gene | விண்வெளி வீரர் மரபணுமாற்றம் |
| Hover Plane | வட்டமிடு வானூர்தி |

ஆதாரம்: சொல்வயல்

தமிழ்நாடு அரசு, செந்தமிழ்ச் சொற்பிறப்பியல் அகரமுதலித் திட்ட இயக்ககச் செயற்பாடுகளையும், "சொற்குவை" வலைத்தளத்தில் பதிவேற்றப்படும் "சொல்வயல்" மின்னிதழில் திங்கள்தோறும் இடம்பெறும் துறைசார் கலைச்சொற்களையும் எடுத்தாண்டு பொதுத்தளப் பயன்பாட்டுப் பரவலாக்கத்தைச் செய்துவரும், ஒன்றிய அரசின் "விகாஸ்பீடியா" இணையதளத்திற்கு நன்றி.

# ஊர்ச்சொற்கள்



அண்டனூர் சுரா
மகாத்மா நகர்
கந்தர்வகோட்டை

ஒவ்வொரு ஊரும் ஒரு புதினம் அளவிற்குத் தகவல், வரலாறு, திரட்டுகளைக் கொண்டிருக்கின்றன. ஊர்க்கான பெயர்க் காரணத்தை ஆராயத் தொடங்கினால் ஊர்கள் மூலப்பெயரைத் தொலைத்துவிட்டு மரூஉ பெயரைக் கொண்டிருப்பதை உணரலாம்.

ஊர் என்பதற்கு ஊர்தல் என்றொரு பொருள் இருக்கிறது. தண்ணீர் தரையில் கொட்டிவிட்டால் தண்ணீர் மண், மணலுக்குள் ஊர்வனம் போன்று ஊர்வதே ஊர்தல் ஆகும். கவிமணி தேசிக விநாயகம், ஆறு தன் வரலாறு கூறுதல் பாடலில் ஆயிரம் காலால் நடந்துவந்தேன், எனப் பாடுகிறார். அப்படியாக ஆயிரம் காலால் ஊர்வதே ஊர்தல்.

மழைக்காலத்தில் மழையால் சுவர் நனைந்து நமர்ந்து பெயர்ந்து விழும். " மழயில சுவர் ஊறிப்போயிருந்திருக்கு. புண்டு விழுந்திருச்சு " என்பது புதுக்கோட்டை வட்டார வழக்கு. இங்கு ஊறுதல் என்பதற்கு நனைதல், இயல்பான தன்மையை மாற்றுதல் என்பதாகப் பொருள் கொள்ளலாம்.

ஊர் என்கிற பின்னொட்டுடன் பல ஊர்கள் உண்டு. அண்டனூர் என்கிற சிற்றூர் புதுக்கோட்டை மாவட்டம் கந்தர்வக்கோட்டை ஒன்றியத்திற்குட்பட்ட பல சமூக மக்கள் வாழக்கூடிய ஊர். அக்னி ஆற்றின் வடகரையில் மூன்று கல் தூரத்தில் இவ்வூர் உள்ளது. இவ்வூர் பெயர்க்காரணம் குறித்து ஆராய்கையில் அண்டனூரை அண்டம் + ஊர், அண்டன்+ஊர் எனப் பிரிக்க முடிகிறது. அண்டம், அண்டன், ஆண்டம், ஆண்டன் ஆகிய சொற்கள் இவ்வூர் பெயரோடு தொடர்புடைய சொற்களாக உள்ளன.

**அண்டம்** என்பதற்கு உலகம் என்று பொருள். முட்டை அண்டம் என்கிற சொல்லால் குறிக்கப்படுகிறது.

**அண்டநீர்**– முட்டையின் வெண்கருவினின்று உருவாகும் நீர்.

**அண்டநோய்** – விதைப்பை வலி நோய்.

**அண்டக்கட்டுதல்**– தொடையின் இடுக்கில் வரும் உருண்டையான கட்டி.

**அண்டப்புற்று**– ஆண்களின் விதைப்பையில் உருவாகும் புண்.

**அண்டக்கழலை**– விதைப்பகுதியில் வரும் ஒரு வகைக் கழலைக்கட்டி.

**அண்டகடாகம்**– பூமியின் மேல்ஓடு.

**அண்டகம்**– கொட்டை, சிறுமுட்டை.

**அண்டக்குகை**– கோழி முட்டையிலிருந்து உட்கருவை நீக்கினால் தோன்றும் துளை போன்ற குகை.

**அண்டக்கூடம்** – உலகக் கோள். பூமி.

**அண்டகை**– விதைக் கொட்டை

**அண்டச்சுவர்**– உலக உருண்டையின் புறத்தோற்றம்

**அண்டமுகடு** – தலையின் உச்சி. உருளையின் மேல்தளம்.

**அண்டக்கல்** – பூமிக்குளிருக்கும் உருண்டையான சுண்ணாம்புக்கல். உவர்மண் பகுதியில் இடுப்பளவிற்குப் பள்ளம் தோண்டினால் ஓணான், பல்லி முட்டைகளைப் போலிருக்கும் இந்தக் கல் நச்சுத்தன்மை வாய்ந்தது.

இவையாவும் அண்டம் என்பதை வேர்ச்சொல்லாகக் கொண்டு உருவான சொற்கள்.

அண்டனூர் அக்னி என்கிற காட்டாற்றின் கரையையொட்டி உப்பு மண் என்று சொல்லக்கூடிய உவர்மண்ணால் ஆனதாக இருக்கிறது. இப்போது உவர்மண்ணின் பரப்பு குறைந்திருந்தாலும் ஒரு காலத்தில் வண்ணார் சமூகம் துணி துவைக்க சலவை மண் இங்கே வெட்டியெடுக்கப்பட்டிருக்கிறது. வீட்டுச் சுவர்களில் வெண்மை தீட்ட இக்கரையில் சுண்ணாம்பு வெட்டியெடுக்கப்பட்டிருக்கிறது. அப்படியாக வெட்டியெடுக்கையில் இரண்டாள் ஆழத்தில் உருண்டையான அண்டக்கல் என்று சொல்லக்கூடிய சுண்ணம் கிடைத்திருக்கிறது. இப்படியான அண்டக்கல்லினாலான தரையில் அமையப்பெற்ற ஊர் அண்டனூர் என்று புரிதல் கொள்ள இடமிருக்கிறது. அண்டனூரை அண்டன்+ ஊர் எனப் பிரித்தறிந்து பார்க்கவும் இடமிருக்கிறது. அண்டன் என்பதற்கு இறைவன், பாத்திரம் என்பதாகப் பொருளுண்டு. இந்தச் சொற்கள் பண்டைய வாழ்வோடு பொருந்துவதாக இல்லை. ஆகவே அண்டம் என்கிற கல், மண்ணினாலான ஊர் அண்டனூர்.

மண், மணல், கரை, பாறை, பள்ளம் இவையாவும் பூமி தரையோடு தொடர்புகொண்ட சொற்கள். அண்டனூரை அண்டக்கல்லுடன் தொடர்புபடுத்தி பெயர்க்காரணத்தை ஏற்பதற்கும் முன்பு இவ்வூருக்கும் அருகமை ஊர்களின் பெயர்களை ஆராய்ந்து பார்க்க வேண்டியது அவசியமாகப் படுகிறது.

அண்டனூர் சிற்றூருக்கு நேர் எதிர்புறம் அதாவது அக்னி ஆற்றைத் தாண்டி இருக்கிற ஊர் ஆற்றங்கரைவிடுதி. முதலில் ஆற்றங்கரை எனப் பெயராக விளங்கிய இவ்வூர் பிறகு மன்னராட்சி காலத்தில் ஆற்றங்கரைவிடுதி ஆனது. இன்று ஆத்தாங்கரைவிடுதி என அழைக்கப்படுகிறது.

## கொல்லம்

அண்டனூருக்கும் அருகில் கொல்லம்பட்டி என்றோர் ஊர் உள்ளது. கொல்லம் என்பது இரும்பு போன்ற மண் வகை நிலம். கொல்லர் என்பவர்கள் இரும்பை அடித்துத் துவைப்பவர்கள். கொல்லம்– சுக்கான், சொறியன் வகைக் கற்களைக் கொண்ட நிலம். கொல்லம் வகை மண் வகையைக் கொண்ட ஊர் கொல்லம்பட்டி. இவ்வூரில் கொல்லங்குளம் என்றொரு குளம் இருக்கிறது.

## மடு

அண்டனூருக்கும் சற்றே தூரத்தில் மணமேடை என்றோர் ஊர் உள்ளது. இங்கு மடை என்பது மடு என்கிற சொல்லின் திரிபு. "ஆறிடு மேடும் மடுவும்போ லாஞ்செல்வம் / மாறிடு மேறிடும் மாநிலத்தீர்" என்கிறது நல்வழி. இங்கு மேடு என்பது உயரம். மடு என்பது பள்ளம். பால் மடிக்கு மடு என்பதாகப் பொருளுண்டு. மடை என்பதற்குத் திறப்பு, மாற்றம், கதவு, கண்மாய்களின் வாயில் என்று பல பொருளுண்டு. மணலாலான மடு அதாவது மணற்பாங்கான பள்ளம் என்று பொருள் கொள்வதே சரியாக இருக்கும். காரணம் மடு என்பதன் எதிர்பதம் மேடு. இவ்வூருக்கும் அருகில் செங்கமேடு என்றொரு ஊர் உள்ளது. மேலும் செங்களூர், செங்கல்பட்டு என்கிற ஊர்கள் தமிழகத்தின் பிற பகுதிகளில் உள்ளன.

## செங்கம்

செங்கம் என்றொரு முள்கொடி இருக்கிறது. சித்த மருத்துவம் இக்கொடியைச் சிரக்கோழி, கெந்தியம், மரூபூரகம், குழலாதொண்டை என்கிற பெயர்களால் அழைக்கிறது. இதுதவிர செங்கம் என்பது ஒரு வகையான பாறை. செங்கம் பாறைகளான மேடு செங்கம்மேடு. அவ்வூர் பிறகு செங்கமேடு என்பதாகத் திரிந்தது.

## அண்ட

இதுதவிர அண்டம் என்பது அண்ட, அண்டை, அண்டையர் என்று பொருள் தருகின்றன. அண்டனூரில் அண்டுதல் என்கிற சொல் மறைந்திருக்கிறது. அதாவது அடைக்கலமடைதல். பண்டைய மனிதர்கள் ஆடு, மாடு, கோழிகளுடன் வாழ்வைக் கழித்தார்கள். இவற்றைத் திருடுவது சிலருக்கு வாழ்வின் அங்கமாகவும்

திருட்டிலிருந்து தன் உடுப்படிகளைக் காப்பாற்றிக் கொள்வது பெரும்பாடாகவும் இருந்திருக்கிறது. இதனால் தற்காப்புத்திறமை இயலாதவர்கள் வலிமையானவர்களிடம் அடைக்கலமடைந்திருக்கிறார்கள். அப்படியாக அடைக்கலம் தேடுவதற்கு அண்ட என்று பெயர் . "அண்ட வந்தவன் ஒண்டிக்கிட்டான்" என்பது ஊர் வழக்கு. அடைக்கலம் தேடி அண்டவந்தவர்கள் குடியேறிய ஊர் அண்டனூர் எனப் புரிந்துகொள்ளவும் இடமிருக்கிறது.

அண்டனூர் ஆண்டைனூராக இருந்து மருவியிருக்கவும் வாய்ப்புண்டு. ஆண்டை என்பது ஆட்சியாளர்களைக் குறிக்கும் சொல். ஆண்டை × அடிமை. நிலங்களைத் தன் வசம் கொண்டு ஆதிக்கம் செலுத்தியவர்கள் ஆண்டைகள்.

இவ்வூரைச் சுற்றிலும் இடையப்பட்டி, கிட்ணப்பட்டி (கிருஷ்ணம்பட்டி), மனப்பட்டி, உரியம்பட்டி, வேலாடிப்பட்டி, மஞ்சம்பட்டி என்று பல பட்டி சிற்றூர்கள் உள்ளன. இவ்வூர் நிலங்கள் மற்றும் மக்களை ஆட்சி செய்த ஊர் ஆண்டனூர். பிறகு இது அண்டனூர் என்பதாக மருவியிருக்கலாம்.

**அண்டனிவயல்**– ஆண்டன்காணிவயல் – அண்டனிவயல்

அண்டனூர் கிராமத்திற்கும் கிழக்கில் வேளாண்மையோடு தொடர்புடைய இனமக்கள் வாழக்கூடிய ஊர் அண்டனிவயல். பரந்த வயற்காடுகளைக் கொண்ட ஊர். இந்த வயற்காடு பற்றி ஆராய்கையில் ஆண்டைகாணிவயல் என்று பொருள்கொள்ள முடிகிறது. ஆண்டை என்பது ஆண்டகை என்று கொண்டால் நில உடைமையாளர்களைக் குறிக்கும். காணி என்பது நில அளவை. பரந்த நிலப்பரப்பு. ஒருவருக்குச் சொந்தமான பரந்த நிலபுலங்களைக் கொண்ட வயல் ஆண்டைகாணிவயல். இவ்வூர் ஆண்டனிவயல் என்றாகி தற்போது அண்டனிவயல் என அழைக்கப்படுகிறது.

### அண்டக்குளம்

அண்டனூர் ஊரோடு அண்டக்குளம் ஊரைத் தொடர்புபடுத்திப் பார்க்கலாம். இவ்வூர் குன்றாண்டார்கோவில் ஒன்றியத்திலுள்ளது. அண்டக்குளம் – அண்டம் குளம். இங்குக் குளம் என்பது நீர் நிலையைக் குறிக்கிறது. இந்த நீர் குடிப்பதற்கு மட்டுமல்ல, வேளாண் செய்யவும் இடமளிக்கிறது. இந்தக் குளத்தை நம்பி அண்ட வந்தவர்களின் ஊர் அண்டக்குளம்.

இவ்வூர் அண்டாகுளம் என்பதாகப் பெயர்பெற்று பிறகு அண்டகுளம் என்று திரிந்திருக்கவும் வாய்ப்புண்டு.

### அண்டாகுளம்

எல்லை, தரை, மட்டம் இவற்றைக் கண்டுபிடிக்க முடியாத ஆழமான குளம் அண்டாகுளம்.

காணி, பட்டி, கோட்டை இம்மூன்றும் தொன்மைக் காலத் தமிழர்களின் நில அளவைகள். பட்டி என்பது சிறிய அளவை. காணி சற்றே பெரிய அளவை. கோட்டை பெரிய அளவை.

### காணி

1 காணி என்பது 24 மனைகளைக் கொண்டது. அதாவது இருபத்து நான்கு குடிகள் குடில் அமைத்து குழந்தைகள், ஆடு, மாடு, கோழிகளுடன் வாழப் போதுமான இடம். இதையே இன்றைய மெட்ரிக் அளவையில் சொல்வதாக இருந்தால் 1.32 ஏக்கர் அதாவது 132 சென்ட். ஒரு காணி என்பது 3 குழி நிலம். இதையே சதுர அடிகளில் சொல்வதாக இருந்தால் 57,499 சதுர அடிகள்.

### காணிப்பட்டி

புதுக்கோட்டை குன்றாண்டார்கோவில் ஒன்றியத்தில் முக்காணிப்பட்டி என்றொரு கிராமம் இருக்கிறது. இதற்கு மூன்று காணி நிலங்களைக் கொண்ட பட்டி என்று பொருள். அதாவது 3×24=72 மனைகள் கொண்ட ஊர்.

முக்காணி என்பது பார்ப்பனர்களின் ஒரு வகை. இவர்கள் குடியிருந்த ஊர் என்று

பொருள்கொள்ள இடமிருப்பினும் பார்ப்பனர்கள் வாழக்கூடிய இடம் பட்டியாக இருந்ததில்லை. ஆகவே முக்காணிப்பட்டி என்பது மூன்று காணி நிலப்பரப்புகள் கொண்ட ஊர் .

## துவார்

புதுக்கோட்டை மாவட்டம் ஆலங்குடிக்கும் அருகில் அக்னி ஆற்றின் தென்கரையில் இவ்வூர் உள்ளது. இதே பெயருடைய ஊர் சிவகங்கை மாவட்டத்திலும் மயிலாடுதுறை மாவட்டத்திலும் உள்ளது. தூவார் என்பதே துவார் என மருவியுள்ளது. தூ என்பதற்குத் தூய்மை, வெண்மை என்று பொருள். ஆர் என்றால் ஆறு. தூய்மையான ஆறு. ஒரு காலத்தில் தூவாரில் பார்ப்பனக் குடும்பங்கள் வாழ்ந்திருக்கிறார்கள். அதற்கு ஆதாரமாக சிவன் மற்றும் ஆனந்தபேச்சி என்கிற வெண்ணாடை உடுத்திய சைவ பெண் தெய்வ வழிபாடு இன்றைக்கு வரைக்கும் உண்டு. தூவாரகை வட இந்திய சிவன் கோவில் அமையப்பெற்ற குடியிருப்பு பகுதி. தூவார் வடமொழி சொல் போன்றிருந்தாலும் திருவள்ளுவர் இச்சொல்லைப் பயன்படுத்தியிருக்கிறார்.

"*மனந்தூய்மை செய்வினை தூய்மை இரண்டும் இனந்தூய்மை தூவா வரும்*" இதன்படி, தூவார் என்பதைத் தூய்மையான ஊர் என்று பொருள் கொள்ளலாம்.

இப்படியாகத் தமிழ்ச்சொற்கள் ஒவ்வொன்றும் பல உள்ளார்ந்த பொருட்பதங்களைக் கொண்டிருக்கின்றன. தமிழர்கள் நிறுவிய ஊர்களும் அதன் பெயர்களும் தமக்குப்பின்னே நீண்ட வரலாற்றையும் சுவடுகளையும் மறைவுச் சொற்களையும் கொண்டிருக்கின்றன, என்பதை அவரவர் ஊர்களின் பெயர்களை ஆராய்வதன் மூலம் உணரலாம்.

---

## அனல் – அனல

அன் – அன்று. அன்றுதல் = சினத்தல். அன்று – கன்று.
கன்றுதல் = சினத்தல், வெயிலாற் கருகுதல்,

அன் – அனல் – கனல் = நெருப்பு. கனலி = கதிரவன்.
அனல் – தீ, வெப்பம், இடி அனலுதல் = அழலுதல்.
அளலி = நெருப்பு, கதிரவன்,

அழல், அன்று, அனல் என்னும் சொற்களின் மூலம் அல் என்பது உய்த்துணரப்படும். அது வழக்கற்றது. அது எல் என்னும் சொல்லொடு தொடர்புள்ளது. எல் = கதிரவன், வெயில், ஒளி, பால்

வடமொழியில் அன் என்பதை மூலமாகக் காட்டுவர். அதற்கு உயிர்த்தல், இயங்குதல் என்னும் பொருளே உண்டு.

நன்றி – பாவாணர் தமிழ்க்களஞ்சியம் –11
வடமொழி வரலாறு – 1



# 2022ஆம் ஆண்டுக்கான தேவநேயப் பாவாணர் விருது! மாண்புமிகு தமிழ்நாடு முதலமைச்சர் அவர்கள் முனைவர் இரா. மதிவாணன் அவர்களுக்கு வழங்கிச் சிறப்பித்தார்!






தமிழ் வேர்ச்சொல் ஆய்வு, அகராதி உருவாக்குதல் மற்றும் தனித்தமிழைப் போற்றுவதற்கு ஊக்கமளிக்கும் வகையில் அகராதியியல் துறையில் சிறந்து விளங்கும் தகுதிவாய்ந்த உள்நாட்டு அகராதியியல் அறிஞர் ஒருவருக்குத் தமிழ்நாடு அரசால் செந்தமிழ்ச் சொற்பிறப்பியல் அகரமுதலித் திட்ட இயக்ககம் வழியாகத் "தேவநேயப் பாவாணர் விருது" வழங்கப்பட்டுவருகிறது.

அந்தவகையில், 2022 ஆம் ஆண்டுக்கான "தேவநேயப் பாவாணர் விருது" முனைவர் இரா. மதிவாணன் அவர்களுக்கு வழங்கப்பட்டது. 16.01.2023ஆம் நாள் சென்னை வள்ளுவர் கோட்டத்தில் நடைபெற்ற திருவள்ளுவர் நாள் விழாவில் மாண்புமிகு தமிழ்நாடு முதலமைச்சர் திரு. மு.க.ஸ்டாலின் அவர்கள் தம் பொற்கரங்களால் இவ்விருதினை வழங்கிச் சிறப்பித்தார்.

முனைவர் இரா. மதிவாணன் அவர்களுக்குத் "தேவநேயப் பாவாணர் விருதும்" விருதுத் தொகையாக இரண்டு இலட்சம் ரூபாயும், ஒரு சவரன் தங்கப் பதக்கமும் வழங்கப்பட்டது. மேலும் தகுதியுரை வழங்கிப் பொன்னாடை அணிவித்துச் சிறப்புச் செய்யப்பட்டது.

## முனைவர் இரா. மதிவாணன்

### வாழ்க்கைக் குறிப்பு

முனைவர் இரா. மதிவாணன் அவர்கள், 1936 சூலை ஒன்றாம் நாள் தருமபுரி மாவட்டம் உகுநீர்க்கல் (ஒகேனேக்கல்) சாலையில் உள்ள பென்னாகரத்தில் பிறந்தவர். திருப்பனந்தாள் செந்தமிழ்க் கல்லூரியில் புலவர் பட்டமும், சென்னைப் பல்கலைக் கழகத்தில் முதுகலை மற்றும் ஆய்வுப்பட்டமும் பெற்றவர். சேலம் அரசு கலைக்கல்லூரியில் பேராசிரியராகப் பணியாற்றியவர்.

தேவநேயப் பாவாணருடன் பணியாற்றி, பாவாணருக்கு அடுத்து அகரமுதலி இயக்ககத்திற்கு இயக்குநராகப் பொறுப்பேற்று 5 மடலங்கள், 10 தொகுதிகள் கொண்ட அகரமுதலிகளை வெளியிட்டவர். பாவாணர் ஆய்வுநெறி, பாவாணரின் ஞால முதன்மொழிக் கொள்கை, திராவிட மக்களின் சிந்துவெளி எழுத்துகள், இலெமூரியா முதல் அரப்பா வரை, கொடகரை மலைவாழ் மக்கள், தொல்காப்பியம் மற்றும் சப்தமணி தற்பணா, குளிர் காவிரி உட்பட 41 நூல்களைப் படைத்துள்ளவர். நூற்றுக்கும் மேற்பட்ட ஆய்வுக் கட்டுரைகளை வழங்கியவர். வெளிநாடுகளுக்குச் சென்று மொழியாய்வு மேற்கொண்டவர்.

ஈராயிரம் ஆண்டுகளுக்கு முந்தைய கிரேக்க நாடகத்தில் 22 தமிழ்ச் சொற்கள் இடம்பெற்றுள்ளமையையும் வெளிப்படுத்தியவர். தொல்காப்பியம் அரங்கேறிய காலம் கி.மு. 835 என்று சான்றுடன் நிறுவியவர். கி.மு. 3000–இல் நியூகினியாவுக்கு அருகிலுள்ள சாலமன் தீவில் இயற்கையாக விளைந்த கரும்பினைத் தமிழ்நாட்டுக்குக் கொண்டுவந்த மன்னன் அதியஞ்சேரல் என்ற வரலாற்றை வெளிப்படுத்தியவர்.

---

### மயங்கொலிச் சொற்கள்

ஒலிவு – ஒருவகை மரம்

ஒழிவு – மிச்சம், குறைவு, ஒழிகை, முடிவு

ஒளிவு – ஒளிர்வு, மறைவிடம், மறைவு

# பிற்படுத்தப்பட்டோர் நல இயக்ககத்தில் புதிய கலைச்சொற்கள் குறித்த கலந்தாய்வுக் கூட்டம் (13.01.2023)








சென்னை, பிற்படுத்தப்பட்டோர் நல இயக்ககத்தில் (13.01.2023) துறைசார் புதிய கலைச்சொற்கள் குறித்த கலந்தாய்வுக் கூட்டம் நடந்தது. இக்கூட்டத்தில் பிற்படுத்தப்பட்டோர் நல இயக்ககத்தின் துணை இயக்குநர் திரு.செ.இரவிச்சந்திரன் அவர்கள் கலந்துகொண்டு வரவேற்புரை நிகழ்த்தினார். செந்தமிழ்ச் சொற்பிறப்பியல் அகரமுதலித் திட்ட இயக்ககத்தின் இயக்குநர் முனைவர் கோ.விசயராகவன் அவர்கள் துறைசார் புதிய கலைச்சொற்கள் பற்றி நோக்கவுரையாற்றினார். இத்திட்டத்தின் ஒருங்கிணைப்பாளர் திரு. வே.பிரபு அவர்கள் அறிமுகவுரையாற்றினார். இக்கூட்டத்தில், மிகவும் பிற்படுத்தப்பட்டோர் நல இயக்ககத்தின் துணை இயக்குநர் திரு.ச.ஜெயபிரகாஷ் அவர்கள் நன்றியுரையாற்றினார், கூட்டத்தில் பிற்படுத்தப்பட்டோர் (ம) மிகவும் பிற்படுத்தப்பட்டோர் நல இயக்ககத்தின் நேர்முக உதவியாளர்கள் திரு.சையத் அப்துல் பாரி, திருமதி. எஸ்.ஷர்மிளி அவர்கள் மற்றும் பணியாளர்கள் , அலுவலர்கள் கலந்துகொண்டு சிறப்பித்தார்கள்.

# தமிழ்க் கலைக்கழகத்தின் 125–ஆவது கூட்டம்




20.01.2023 ஆம் நாள், தமிழ்க் கலைக்கழகத்தின் 125–ஆவது கூட்டம் அகரமுதலி இயக்ககத்தில் இயக்குநர் முனைவர் கோ. விசயராகவன் அவர்கள் தலைமையில் நடைபெற்றது. கூட்டத்தில், அலுவல்சாரா உறுப்பினர்களான புலவர் வெற்றியழகன், முனைவர் கு.பாலசுப்பிரமணியன், ஆகியோர் பங்கேற்றனர்.மதிப்புறு உறுப்பினரான செம்மொழித் தமிழாய்வு மத்திய நிறுவனத்தின் மேனாள் பதிவாளர் முனைவர் மு.முத்துவேலு, நூல் மதிப்புரையாளரான கவிஞர் மெய்ஞானி பிரபாகரபாபு மற்றும் அலுவல்சார் உறுப்பினர்கள் கலந்துகொண்டனர். கூட்டத்தில் 212 தமிழ்க் கலைச் சொற்களுக்கு வல்லுநர் குழு ஏற்பளித்துள்ளது.

# தமிழ்க் கலைக்கழகத்தின் 126–ஆவது கூட்டம்




27.01.2023 ஆம் நாள், தமிழ்க் கலைக்கழகத்தின் 126–ஆவது கூட்டம் அகரமுதலி இயக்ககத்தில் நடைபெற்றது. கூட்டத்தில், அலுவல்சாரா உறுப்பினர்களான புலவர் வெற்றியழகன், முனைவர் கு.பாலசுப்பிரமணியன், திரு. அ. மதிவாணன் ஆகியோர் பங்கேற்றனர். மதிப்புறு உறுப்பினரான செம்மொழித் தமிழாய்வு மத்திய நிறுவனத்தின் மேனாள் பதிவாளர் முனைவர் மு.முத்துவேலு, திரு. ஆ. அரிமாப் பாமகன், திரு. வெற்றிச்செல்வன் மற்றும்அலுவல்சார் உறுப்பினர்கள் கலந்துகொண்டனர். கூட்டத்தில் 189 தமிழ்க் கலைச் சொற்களுக்கு வல்லுநர் குழு ஏற்பளித்துள்ளது.

# மருத்துவக் கலைச்சொல் அகராதி சொல்சீராய்வுக் கூட்டம்



செந்தமிழ்ச் சொற்பிறப்பியல் அகரமுதலித் திட்ட இயக்ககம் உருவாக்கிவரும் மருத்துவக் கலைச்சொல் அகராதிக்காகத் தொகுக்கப்பட்டுள்ள சொற்களுக்கான சீராய்வுக் கூட்டம் தஞ்சாவூரில் 27.01.2023ஆம் நாள் நடைபெற்றது. தமிழ்நாடு அரசு, செந்தமிழ்ச் சொற்பிறப்பியல் அகரமுதலித் திட்ட இயக்ககத்தின் வழியாக, ஆங்கிலச் சொற்களுக்கு இணையான புதிய தமிழ்க் கலைச்சொல் அகராதி உருவாக்கி வெளியிட இசைவளித்து தமிழ்நாடு வெளியிட்டுள்ள அரசாணையின்படி, அகரமுதலி இயக்ககமானது, தமிழ்நாடு பாடநூல் (ம) கல்வியியல் பணிகள் கழகத்துடன் இணைந்து, துறைசார் வல்லுநர்களைக் கொண்ட குழுக்களை அமைத்து, ஆண்டுக்கொரு துறையைத் தேர்வுசெய்து கலைச்சொல் அகராதிகளை உருவாக்கி வெளியிடவுள்ளது. அதன்படி நடப்பாண்டில் முதற்கட்டமாக மருத்துவக் கலைச்சொல் அகராதி உருவாக்கப் பணிநடைபெற்றுவருகிறது. இந்த அகராதிக்காகத் தொகுக்கப்பட்ட சொற்களைச் சீராய்வு செய்வது தொடர்பான கூட்டம் தஞ்சாவூரில் 27.01.2023ஆம் நாள் நடைபெற்றது. அகரமுதலி இயக்கக இயக்குநர் முனைவர் கோ. விசயராகவன் அவர்கள் தலைமையில் நடைபெற்ற இக்கூட்டத்தில், மூத்த மருத்துவர் சு.நரேந்திரன் அவர்கள் முன்னிலை வகித்தார். கூட்டத்தில் மருத்துவர் இரா. இளங்கோவன், மருத்துவர் இரா.முத்துக்குமரன், இத்திட்டத்தின் சொல் திரட்டுனர் முனைவர் மு.கண்ணன், தஞ்சை தமிழ்ப் பல்கலைக்கழக அகராதியியல் துறைத்தலைவர் முனைவர் உல. பாலசுப்பிரமணியன் ஆகியோர் பங்கேற்று, முதற்கட்டமாகத் தொகுக்கப்பட்ட 13,752 சொற்களில் 2,321 கலைச்சொற்களைச் சீராய்வு செய்து, தம் கருத்துரைகளை வழங்கினார்கள். மேலும், மருத்துவக் கலைச்சொல் அகராதி உருவாக்கத்திற்குத் தேவையான நூல்களை மருத்துவ வல்லுநர்களும், தமிழ்ப் பல்கலைக் கழகத்தினரும் வழங்கியதோடு, மருத்துவக் கலைச்சொல் அகராதி உருவாக்கப் பணிக்குத் தங்களது முழு ஒத்துழைப்பையும் நல்குவதாகஉறுதியளித்தனர். கூட்டத்தில் அகரமுதலி இயக்ககப் பதிப்பாசிரியர் கி.தமிழ்மணி உடனிருந்தார்.

# போக்குவரத்துத்துறை ஆணையரகத்தில் புதிய கலைச்சொற்கள் குறித்த கலந்தாய்வுக் கூட்டம்





சென்னை, சேப்பாக்கம் போக்குவரத்துத்துறை ஆணையரகத்தில் (30.01.2023) துறைசார் புதிய கலைச்சொற்கள் குறித்த கலந்தாய்வுக் கூட்டம் நடைபெற்றது. இக்கூடத்தில் இணைப் போக்குவரத்துத்துறை ஆணையர் (நிருவாகம்) திரு.த.வெங்கட்ராமன் அவர்கள் கலந்துகொண்டு வரவேற்புரை நிகழ்த்த, போக்குவரத்துத்துறை ஆணையரகத்தின் ஆணையர் திரு.நிர்மல்ராஜ் இ.ஆ.ப., அவர்கள் தலைமையுரையாற்றினார். செந்தமிழ்ச் சொற்பிறப்பியல் அகரமுதலித் திட்ட இயக்ககத்தின் இயக்குநர் முனைவர் கோ.விசயராகவன் அவர்கள் துறைசார் புதிய கலைச்சொற்கள் பற்றி நோக்கவுரையாற்றினார். ஆணையரகத்தின் உதவி செயலாளர்கள், நேர்முக உதவியாளர்கள் மற்றும், அலுவலர்கள் கலந்துகொண்டு சிறப்பித்தார்கள். இத்திட்டத்தின் ஒருங்கிணைப்பாளர் வே.பிரபு உடனிருந்தார்.

# அகரமுதலி இயக்ககம் நெறிப்படுத்தும் பன்னாட்டுக் கலைச்சொல்லாக்கப் பயிலரங்கம்!

*"சென்றிடுவீர் எட்டுத் திக்கும் – கலைச்*
*செல்வங்கள் யாவும் கொணர்ந்திங்குச் சேர்ப்பீர்"*

– மகாகவி பாரதியார்.

இன்றைய அறிவியல் தொழில்நுட்ப உலகில் நாள்தோறும் பெருகிவரும் பல்வேறு துறைசார்ந்த, பிறமொழியிலுள்ள கலைச்சொற்களுக்கு இணையான தமிழ்க்கலைச்சொற்களை உடனுக்குடன் வடிவமைத்து, மக்களின் பயன்பாட்டிற்குக் கொண்டுவருவது தமிழ்மொழியின் சொல்வள மேம்பாட்டிற்குரிய முகாமையான பணியாகும்.

தமிழ்நாடு அரசின் சீரிய நெறிப்படுத்தலின்கீழ், செந்தமிழ்ச் சொற்பிறப்பியல் அகரமுதலித் திட்ட இயக்ககத்தால் 2021 அக்டோபர் 1ஆம் நாளிலிருந்து வெள்ளிதோறும் இணையவழிப் பன்னாட்டுக் கலைச்சொல்லாக்கப் பயிலரங்கம் நடத்தப்பெறுகிறது. புறநிலையில் உள்ள சொல்லாக்க வல்லுநர்களின் துணையோடு தமிழின் கலைச்சொல் வளத்தை உயர்த்தும் நோக்கில் நடத்தப்பெறும் இப்பயிலரங்கத்தின் 67–70 வரையிலான அமர்வுகள் 2023 சனவரி 06, 12, 20, 27 ஆகிய நாள்களில் நடைபெற்றன. 70ஆவது அமர்வில் சவுதி அரேபியா, மெய்நிகர் அறிவியல் தமிழிருக்கையின் முதன்மை அறிவியல் மதியுரைஞர் பேரா. மரு. மு. செம்மல் அவர்கள் பங்கேற்று வாழ்த்துரை வழங்கிச் சிறப்பித்தார். பயிலரங்க அமர்வுகளில் அயல்நாட்டு அறிஞர்கள், உள்நாட்டு அறிஞர்கள் பங்கேற்று பல்வேறு துறைசார்ந்த தமிழ்க் கலைச்சொற்களை அறிமுகம் செய்து உரையாற்றினர்.

சொல்லாய்வாளர்கள், சொல்லாக்க அறிஞர்கள், தமிழார்வலர்கள், ஆய்வாளர்கள், பேராசிரியர்கள் உள்ளிட்ட பலர் பங்கேற்றும் பார்த்தும் பயன்பெற்றனர். கலைச்சொற்களை அறிமுகம் செய்த சொலாக்க அறிஞர்களுக்கும், பங்கேற்பாளர்களுக்கும் இயக்ககத்தின் சார்பில் பாராட்டுச் சான்றிதழ்களும் பங்கேற்புச் சான்றிதழ்களும் வழங்கப்பட்டன.

அமர்வுகளில் பங்கேற்கும் அறிஞர்களின் ஒருங்கிணைப்பினைப் பாரிசு பன்னாட்டு உயர்கல்வி தமிழாய்வு நிறுவன இயக்குநர் முனைவர் பேரா. ச. சச்சிதானந்தம் அவர்களும், தொழில்நுட்ப ஒருங்கிணைப்பினைச் சென்னை வேல்ஸ் அறிவியல் (ம) தொழில்நுட்ப உயர் ஆராய்ச்சி நிறுவனத்தின் தமிழ்த்துறை இணைப் பேராசிரியர் முனைவர்

இரா. பன்னிருகைவடிவேலன் மற்றும் இயக்கக உதவிப் பதிப்பாசிரியர் திரு. ஏ. காந்தி ஆகியோரும் மேற்கொண்டனர்.

## 06.01.2023ஆம் நாள் நடைபெற்ற பயிலரங்க நிகழ்வில் கலைச்சொற்களை அறிமுகம் செய்த அறிஞர்கள்



**திரு. தி. இரவீந்திரன்**
தகவல் தொழில்நுட்பவியலாளர்,
செருமனி



**பொறிஞர் எட்வேட்யூட் நிக்சன் (எ) ஈழபாரதி**
மேனாள் விரிவுரையாளர், செந்தூரான் பல்தொழில்நுட்பக் கல்லூரி, புதுக்கோட்டை,
பாரிசு



**முனைவர் ஜெ. வினாயகம்**
பொருளாளர், தைவான் தமிழ்ச் சங்கம்,
தைவான்



**முனைவர் சௌ. மங்கையர்க்கரசி**
இணைப்பேராசிரியர், கணினி அறிவியல் துறை, வேல்ஸ் அறிவியல் (ம) தொழில்நுட்ப உயர் ஆராய்ச்சி நிறுவனம்,
சென்னை



**முனைவர் இரா. துர்கா**
இணைப்பேராசிரியர், கணினி அறிவியல் துறை, வேல்ஸ் அறிவியல் (ம) தொழில்நுட்ப உயர் ஆராய்ச்சி நிறுவனம்,
சென்னை

## 12.01.2023ஆம் நாள் நடைபெற்ற பயிலரங்க நிகழ்வில் கலைச்சொற்களை அறிமுகம் செய்த அறிஞர்கள்



**திரு. வாசு இராமநாதன்**
இசைத்தமிழ் பயிற்றுநர்,
குவைத் மாத்தமிழ் மரபுப்பாப் பட்டறை,
குவைத்



**மரு. அ. செந்தில்**
நடுவண் செயற்குழு உறுப்பினர்,
இந்திய குழந்தை மருத்துவக்
குழுமம் – 2022/23,
உலகமதி மருத்துவமனை, நெய்வேலி



**பொறிஞர் பத்மப்ரியா இராகவன்**
இயக்குநர், டிவைன் இந்தியா நிறுவனம்,
பாரிசு



**முனைவர் சு. சதாசிவம்**
உதவிப் பேராசிரியர், தமிழ்த்துறை,
சென்னைக் கிறித்தவக் கல்லூரி (தன்னாட்சி),
தாம்பரம்

## 20.01.2023ஆம் நாள் நடைபெற்ற பயிலரங்க நிகழ்வில் கலைச்சொற்களை அறிமுகம் செய்த அறிஞர்கள்



**திரு. வி. இ. குகநாதன்**
எழுத்தாளர், ஒன்றிணைந்த அரசகம்.



**முனைவர் க. தைலாம்பாள்**
இணைப்பேராசிரியர், கணினி அறிவியல்
துறை, வேல்ஸ் அறிவியல் (ம)
தொழில்நுட்ப உயர் ஆராய்ச்சி நிறுவனம்,
சென்னை



**முனைவர் ஜெ. வினாயகம்**
பொருளாளர்,
தைவான் தமிழ்ச் சங்கம், தைவான்



**முனைவர் த.ஸ்ரீகலா**
இணைப்பேராசிரியர், கணினி
அறிவியல் துறை, வேல்ஸ்
அறிவியல் (ம) தொழில்நுட்ப உயர்
ஆராய்ச்சி நிறுவனம், சென்னை



**பொறிஞர் சத்யன்**
மின்பொறியியல் மேற்பார்வையாளர்,
குவைத் தேசிய கன்னெய் தூய்விப்பாலை,
குவைத்

## 27.01.2023ஆம் நாள் நடைபெற்ற பயிலரங்க நிகழ்வில் கலைச்சொற்களை அறிமுகம் செய்த அறிஞர்கள்




**மரு. மு. செம்மல்**
முதன்மை அறிவியல் மதியுரைஞர்
மெய்நிகர் அறிவியல் தமிழிருக்கை,
சவுதி அரேபியா



**மரு. முனைவர் அ. யோசெப்பூட்**
துணைப் பேராசிரியர், மருந்தியல்
ஆராய்ச்சித்துறை, நியூசெர்சி, அமெரிக்கா



**முனைவர் விஜய் அசோகன்**
அறிவியல் ஆராய்ச்சியாளர்,
கார்லருஹ் பல்கலைக்கழகம், செருமனி



**திரு. இரா. திருமாவளவன்**
தேசியத் தலைவர்,
மலேசியத் தமிழ்நெறிக்கழகம், மலேசியா



**திருமதி வெ. காயத்ரி**
மொழிபெயர்ப்பாளர், கோயம்புத்தூர்.

# அறிஞர்கள் வழங்கிய கலைச்சொற்களுள் சில :

**திரு. தி. இரவீந்திரன்**
Triage – வகைப்படுத்தல் ஆய்வு / தேர்வாய்வு
Normalisierung period –இயல்பாக்கக் காலம்
Autokino – ஊர்தித் திரையரங்கு

**பொறிஞர் எட்வேட்யூட் நிக்சன் (எ) ஈழபாரதி**
immigrant –குடிபெயர்ந்தோர்
Asylum seeker–புகலிடகோரிக்கையாளர்
Migrant–புலம்பெயந்தவர்

**முனைவர் ஜெ. வினாயகம்**
Ammonia – முநீர்னை
Amine– முநீரன்
Primary Amine– ஓர்முநீரான்

**முனைவர் சௌ. மங்கையர்க்கரசி**
Telecomputer – தொலைக்கணினி
Debugger – பிழைத்திருத்தி
Precomputer – முன்கணினி

**முனைவர் இரா. துர்கா**
Algorithm language – நெறிப்பாட்டு மொழி
E–governance – மின் அராண்மை
Hyphenation – சொல்பிரித்தல்

**திரு. வாசு இராமநாதன்**
மத்தார் – வானூர்தி நிலையம்
தாஸ்கரா – பயணச்சீட்டு
யாஹ்யாட் – வாழ்த்துகள்

**பொறிஞர் பத்மப்ரியா இராகவன்**
Philanthropreneur –ஒப்புரவாண்மையர்
Smize – கண்ணகை
Supertasker – மீத்திறனாளர்

**மரு. அ. செந்தில்**
Psychosomatic Illness – மனமெய்சார் நோய்
Fine Motor Skills – சீரியங்கு திறன்
Gross motor skills – பேரியங்கு திறன்

**முனைவர் சு. சதாசிவம்**
அடசட்டி – பானையின் மேல்மூடி
குடாப்பு – குட்டிகளை மூடிவைக்கும் கூடை
முட்டி – கள் சேகரிக்கும் பானை

**திரு. வி. இ. குகநாதன்**
Grandmaster ( GM) = பேராதன்
Woman Grandmaster ( WGM) = பேராதி
International Master (IM ) = உலகாதன்

**முனைவர் ஜெ. வினாயகம்**
Propane –மூகாரன்
Butane – நாற்காரன்
Pentane – ஐகாரன்

**பொறிஞர் சத்யன்**
Steam Turbine – நீராவித் திறனுருளி,
Gas Turbine – வளிமுடுக்குத் திறனுருளி,
Hydro Turbine – நீர்முடுக்குத் திறனுருளி

**முனைவர் க. தைலாம்பாள்**
Web mining– இணையச் சுரங்கம்
Web scraping– வலைதுருவல்
Cyber Bullying– மின்வெளி மிரட்டல்

**முனைவர் த.ஸ்ரீகலா**
Tech savvy – தொழில்நுட்ப ஆர்வலர்
Cyber suicide – மின்வெளித் தற்கொலை
Keylogger – கணினி ஒற்றன்

**திரு. இரா. திருமாவளவன்**
Free lancer – சாரார் / சாராப் பணியர்
Dropper – சொட்டி
Pizza – பிசினப்பம் / பற்றப்பம்

**மரு. முனைவர் அ. யோசெப்யூட்**
Resting potential – ஓய்வழுத்தம்
Action potential – செயலழுத்தம்
Healthspan – நலவாழ்வுக் காலம்

**முனைவர் விஜய் அசோகன்**
Climate Emergency – பருவ விரைவுநிலை
Carbon Sequestration – கரிமத் தேக்கம் / கரிம ஒதுக்கம்
Biogeochemical Cycle – உயிர்நிலவேதிச் சுழற்சி

**திருமதி வெ. காயத்ரி**
Extreme weather – இடர் வானிலை
Free – range – திறந்தவெளிப் பண்ணை
Hyper – local food – அருகமை தோட்டம்

**சொல் வளமே
மொழி வளத்தின் அளவுகோல்!**